23rd August 1960]

MR. SPEAKER : இன்றைய தினம் கனம் அங்கத்தினர் கோவிந்தசாமி அவர்களும், கனம் அங்கத்தினர் கல்யாணசுந்தரம் அவர்களும் பேசின பிறகு கனம் நிதி அமைச்சர் அவர்கள் பதில் அளிப்பது என்று நேற்று இந்தச் சபை ஒப்புக்கொண்டது என்று நினைக்கிறேன். இம்மூவரும் பேசிய பிறகு ஒவ்வொரு மான்யக் கோரிக்கையையும் நான் சபையினரிடம் 'வோட்டு'க்கு விடு கிறேன்.

SRI A. GOVINDASAMY : கனம் சட்டமன்றத் தலைவர் அவர்களே, கனம் நிதி அமைச்சர் அவர்கள் இந்த அவையிலே சமர்ப்பித்திருக்கும் உப மான்யக் கோரிக்கை மீது என் கருத்துக் களைச் சொல்ல விரும்புகிறேன். சம்பளக் குழுவினர் செய்த சிபார்சையொட்டி நமது சர்க்கார் ஏற்றுக்கொண்டிருக்கிற அதிகப்படியான செலவை இந்தச் சபை அங்கீகரிக்க வேண்டு மென்று கொண்டுவரப்பட்டிருக்கிற மான்யத்தை நான் வரவேற் கிறேன்.

(Mr. Deputy Speaker in the Chair.)

என்.ஜி.ஓ-க்களின் குறைகளை அரசாங்கம் கவனித்து அவர் களுக்குச் சம்பள உயர்வும், பஞ்சப்படி உயர்வும், மற்ற பல வசதி களும் கொடுத்து, நிர்வாகத்திலே இருக்கும் தொல்லைகளைத் தவிர்க்கின்ற முறையிலே சில குறைபாடுகளைத் நீக்கவேண்டு மென்று என்.ஜி.ஓ. குழுவினர் மாநாடு போட்டு அரசாங்கத்திடத் திலே விண்ணப்பம் கொடுத்த நேரத்திலே ஆட்சியிலே உள்ளவர் கள், குறிப்பாக அமைச்சர்கள், 'எதிர்க்கட்சிக்காரர்கள் தூண்டி விட்டுத்தான் என்.ஜி.ஓ.-வினர் சம்பள உயர்வு கேட்கிறார்கள்' என்ற குற்றச்சாட்டைச் சொன்னார்கள். என்.ஜி.ஓ.-வினரை அவர்கள் சந்தித்த நேரத்தில், 'யார் உங்களைத் தூண்டி விட்டார் கள்?' என்று கேட்டதாகவும், 'எங்களுக்குக் கொடுக்கப்படும் சம்பளம் திருப்திகரமாக இருக்கிறது; ஆனால் எதிர்க்கட்சிக் காரர்கள்தான் தூண்டி விடுகிறார்கள்' என்று அவர்கள் சொன்ன தாகவும் அரசாங்கத் தரப்பில் உள்ளவர்கள் இந்த அவையிலே பேசிய நேரத்தில் எதிர்க்கட்சிக்காரர்களைக் குற்றம் சாட்டினார்கள். ஆனால், அவர்களுடைய கோரிக்கை நியாயமானது என்பதைப் பரிசிலனை செய்த சம்பளக் கமிஷனே ஒத்துக்கொண்டது. ஒத்துக்கொண்டது மாத்திரமல்லாமல், சில முக்கியமான சிபார்சு களையும் செய்திருக்கிறார்கள். அவர்களுடைய நல்ல எண்ணத்தை யும், அவர்கள் இதிலே தங்கள் ஆழ்ந்த கவனத்தைச் செலுத்தி யதையும், குறித்து நான் அந்தக் குழுவினருக்கு முதலிலே நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறேன், என்.ஜி.ஓ. வினரின் சார்பாக. அதை அமுல் நடத்துகின்ற முறையில் நமது அரசாங்க மும் ஓரளவு முன் வந்ததும் பாராட்டுதற்கு உரிய விஷயம்தான். இருந்தாலும், இதிலே சில குறைபாடுகள் இருக்கின்றன. அந்தக் குறைபாடுகளைக் கவனித்து, களைந்தெறிய அமைச்சர் அவர்கள் வேலூரில் நடைபெற்ற என்.ஜி.ஓ.-வினர் மாநாட்டிலே உறுதி மொழி அளித்திருக்கிறார்கள். அவர்களுடைய குறைகள் மேலும்

ஏதாவது இருக்குமானல், திட்டம் நடைமுறைக்கு வரும்போது, அதையெல்லாம் களைந்தெறிவதாகச் சொல்லியிருக்கிருர்கள். நடைமுறைக்குக் கொண்டுவரக் கூடிய முறையில்தான் இந்த அவையில் நேற்றும் இன்றும் பேசப்படும் கருத்துக்களை அமைச்சர் அவர்கள் மனதில் வைத்துக்கொண்டு பணியாற்ற வேண்டுமென்று இந்த நேரத்தில் நான் கேட்டுக்கொள்ள விரும்பு கின்றேன்.

இன்றைக்காவது என்.ஜி.ஓ.-க்களுடைய குறைகள் நியாய மானது என்று ஒத்துக்கொண்டு அதற்கு பரிகாரம் தேட வந்தி ருக்கிருர்கள். இப்பொழுதாவது எதிர்க்கட்சிக்காரர்கள் உருப் படியான யோசனைகளைச் சொல்லுகிருர்கள் என்று அரசாங்கம் நினைக்க முன் வந்திருக்கிருர்கள். எதிர்க்கட்சிக்காரர்களுடைய யோசனை இப்பொழுதாவது உருப்படியானது என்று எண்ணி அதை அமுல் நடத்தக்கூடிய நிலைக்கு அரசாங்கம் வந்திருக் கிருர்கள். அப்படி அவர்கள் அமுல் நடத்த வந்ததிலுள்ள நிலைக்கு எங்களுக்கும் அதில் பங்கு உண்டு என்பதை நான் பூரிப்போடு வரவேற்கிறேன். இருந்தாலும் சில குறைபாடுகள் இருக்கத்தான் செய்கிறது.

24—2—1959-ல் இந்த பே கமிஷனனது நியமிக்கப்பட்டது. ஒரு வருஷம் இரண்டு மாதங்கள் கழிந்து இன்றைய தினம் இந்த அறிக்கையானது சம்பளக் குழுவால் சமர்ப்பிக்கப்பட்டிருக் கிறது. அவர்கள் அதை எப்ரல் மாதத்தில் கொடுத்திருந்தாலும் அதை ஜுன் மாதத்தில் தான் அமுல் நடத்த வருகிருர்கள். அதாவது மேலும் இரண்டு மாதங்கள் கழிந்துதான் அரசாங்கம் அதை அமுல் நடத்த வருகிறது. ஆனல் 24—2—1959-ல் அதாவது பே கமிஷன் நியமிந்த நேரத்தில் எந்த அளவு வாழ்க்கை குறியீடு இருந்ததோ அந்த அடிப்படையை வைத்துக்கொண்டு பே கமிஷன் சிபாரிசுகளை செய்திருக்கிருர்கள். ஒரு வருஷம் இரண்டு மாதங்கள் கழிந்து அவர்கள் அறிக்கையை சமர்ப்பித்தாலும் மேலும் இரண்டு மாதங்கள் கழிந்துதான் அந்தச் சிபாரிசின்படி சம்பளம் அமுலுக்கு வருகிறது. இன்றைய தினம் நமது அரசாங்கம் மற்ற பல விஷயங்களில் மத்திய அரசாங்கத்தை பின்பற்றும் போது இந்த சம்பளக் குழு சிபாரிசின் விஷயத்தில் மட்டும் ஏன் அவர்களை பின்பற்றக்கூடாது? மத்திய அரசாங்க சம்பளக்குழு சிபாரிசின்படி சம்பளம் கொடுப்பதை ரெட்ராஸ்-பெக்டிவ் எபெக்ட்டாக இருக்க வேண்டும் என்று சொன்னதை அவர்கள் ஏற்றுக்கொண்டு அதன்படியும் கொடுத்திருக்கிருர்கள். அது விஷயத்தில் நமது சர்க்கார் ஏன் கவனம் செலுத்தவில்லை என்பது தெரியவில்லை. அந்த முறையைப் பின்பற்றி நமது அரசாங்கம் கொடுக்க முன் வந்தால் அதனல் நல்ல பலன் ஏற்படும் என்பதையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன். இதைப் பற்றி நான் சொல்லும்போது கனம் அமைச்சர் முகத்தில் புன் முறுவல் தோன்றுகிறது. நான் சொல்வதில் அவருக்கு கோப மாக இருந்தாலும் பின்னல் நான் சொன்னதைப்பற்றி சிந்தித்துப் பார்த்து அது சரியென்று சொல்லுவார்.

23 rd August 1960]

THE HON. SRI C. SUBRAMANIAM : கோபக்குறி இருந்தால் புன்சிரிப்பு இருக்காது.

SRI A. GOVINDASAMY : இன்றைய தினம் அறிக்கையைப் பார்த்தால் பல விஷயங்கள் அதிலிருந்து தெரிய வருகிறது. அதைக்கண்டு நாங்கள் மகிழ்ச்சி அடைகிறோம். மகிழ்ச்சி அடையக்கூடிய பல சிபாரிசுகள் இருக்கின்றன. எதிர்க் கட்சிக் காரர்களும் பல யோசனைகளைக் கூறியிருக்கிறார்கள். அதை மந்திரி சபை மறுக்க முடியாது. அவைகள் நல்ல யோசனைகளாக இருந்தாலும் அவைகளை மந்திரி சபை ஏற்றுக்கொண்டிருக்க வேண்டும்.

அடுத்தபடியாக இன்றைய தினம் சம்பளக் கமிஷன் பஞ்சப் படியை சம்பளத்துடன் சேர்த்திருப்பது ஒரு நல்ல விஷயம்தான். அது பாராட்டுதற்குரிய விஷயம்தான். அது மாத்திரம் அல்லாமல் பென்ஷன் ஸ்கிம் பெறுகிறவர்களுக்கும் ஏற்கனவே இருந்ததைவிட புதிய சில மாறுதல்கள் செய்திருக்கிறார்கள். அதுவும் வரவேற்கத்தக்க விஷயம்தான். அது மாத்திரம் அல்ல, இப்பொழுது நிரந்தரமாக ஆக்கப்படாமல் இருக்கக்கூடிய கண்டின் ஜென்சிஸ் கூலிகளை நிரந்தரமாக்க வேண்டும் என்று சிபாரிசு செய்திருக்கிறது. அதை அரசாங்கம் அமுலுக்குக் கொண்டு வருவதைக் கண்டு பாராட்டுதற்குரியதாக இருக்கிறது, என்பதையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

அத்துடன் வெளியிலிருந்து ஐம்பது சத விகிதம் உத்யோகஸ்தர்களை செக்ரடேரியட்டிற்கும் எடுத்துக்கொள்வதற்கும் மாற்றிக் கொள்வதற்கும் இந்த கமிஷன் சிபாரிசு செய்திருக்கிறது. அதுவும் வரவேற்கக்கூடிய விஷயமாக இருக்கிறது என்பதை இந்த நேரத்தில் நான் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ஆனால் இந்த சிபாரிசில் லீவு நாட்கள், ஓய்வு நாட்கள், குறைக்கப் பட்டிருக்கிறது. ஏற்கெனவே சர்க்கார் 26 நாட்கள் விடுமுறை நாட்களாக விட்டிருந்தார்கள். அதை 15 நாட்களாகக் குறைத்தும் அதைத் தவிர மூன்று நாட்கள் அவர்கள் இஷ்டம் போல் விடுமுறை நாட்களாக எடுத்துக் கொள்ளலாம். அதாவது 18 நாட்கள் விடுமுறை நாட்கள் என்ற நிலைமையை ஏற்படுத்தி யிருக்கிறார்கள். அது மாத்திரம் அல்ல. காஷுவல் லீவு ஏற்கெனவே 15 நாட்கள் இருந்தது. இப்பொழுது அதை 12 நாட்களுக்குக் குறைத்து விட்டார்கள். வேலை நேரம் ஏற்கனவே 5½ மணியாக இருந்தது. இப்பொழுது ஆறு மணியாக உயர்த்தப்பட்டிருக்கிறது. ஒரு நாளைக்கு அரை மணி நேரம் அதிகப்படுத்தியதன் அவசியம் என்ன? ஏற்கனவேதான் அவர்கள் அதிக நேரம் வேலை செய்துகொண்டிருக்கிறார்கள். விடுமுறை நாட்களில்கூட அவர்கள் வேலை செய்துகொண்டிருக் கிறார்கள். அப்படிப்பட்ட நிலைமையில் அவர்களை நிர்ப்பந்தப் படுத்தி அரை மணி நேரம் அதிகப்படியாக வேலை செய்ய வேண்டும் என்று சொல்வதன் அவசியம் என்ன? ஏற்கனவே அவர்கள் ஒரு ஆண்டில் 1,782 மணி நேரம் வேலை செய்தார்கள். இப்பொழுது

இந்த சிபாரிசின்படி 2,010 மணி நேரம் வேலை செய்யும்படியான நிலைமைக்கு வந்திருக்கிறது. 228 மணி நேரம் அதிகமாக வேலை செய்ய வேண்டியதாக இருக்கிறது. இந்த 228 மணி நேர வேலைக்கு 240 ரூபாய் உயர்வு பெறுகிறார்கள். ஆகவே 80 ரூபாய் சம்பளம் வாங்கும் ஒரு யு.டி.சி.-க்கு மணி ஒன்றுக்கு 88 நயா பைசா ஊதியமாக கிடைத்து வந்தது. இப்பொழுது 90 நயா பைசாவாகக் கிடைக்கிறது. அந்த அளவு தான் அவருடைய ஊதியம் உயர்ந்திருக்கிறது என்பதை இந்த நேரத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இதைப்போலவே வேறு சில குறைபாடுகளும் இருக்கின்றன, என்பதை அரசாங்கத்தினுடைய, நிதி அமைச்சருடைய கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். ப்ளாக் டெவலப்மெண்ட்டில் வேலை செய்கிற இண்டஸ்ட்ரீஸ் எக்ஸ்டென்ஷன் ஆபீசருக்கு இதற்கு முன் சம்பளம் 100-5-150-10-200 இருந்தது. இப்பொழுது 150-5-175-10-225-15-375 என்று உயர்த்தப்பட்டிருக்கிறது. பஞ்சாயத்து எக்ஸ்டென்ஷன் ஆபிசருக்கு ஏற்கனவே கிடைத்து வந்தது 100-5-150. இப்பொழுது 140-5-220 என்று உயர்ந்தப்பட்டிருக்கிறது. அதனால் இருவருக்கும் ஒரு விதமான அடிப்படைதான் இருந்தது, அதாவது 100 ரூபாய் தான் இருந்தது. இருவருக்கும் ஒரு வருஷத்தில் ஐந்து ரூபாய்தான் உயர்வு. ஒருவருக்கு 150-ம் மற்றொருவருக்கு அடிப்படையில் 140-ம் என்று இருப்பானேன். இந்த வித்யாசம் எதற்கு. அதே போல் அக்ரிகல்சரல் எக்ஸ்டென்ஷன் ஆபீசர் இருக்கிறார். அவருக்கு 135-5-170-10-270 ஆக இருந்தது. இப்பொழுது 200-10-250-15-400 ஆக உயர்த்தப்பட்டிருக்கிறது. அதேபோல் கூட்டுறவு இலாகாவிலிருந்தவருக்கு 150-5-200, இப்பொழுது 200-5-240 என்று மாறி இருக்கிறது. ஆகவே கூட்டுறவு ஆபிசருக்கும் விவசாய ஆபிசருக்கும் உயர்த்திக்கொடுத்து விட்டு பஞ்சாயத்து ஆபிசருக்குக் கொடுக்கவில்லை. அதன் காரணம் என்ன என்பது தெரியவில்லை. பஞ்சாயத்தில் வேலை செய்யக்கூடியவர்களுக்கு குறைவாக சம்பளம் கொடுக்கவேண்டிய அவசியம் என்ன? பஞ்சாயத்துக்களுக்குத் தான் நாம் இனிமேல் முக்கியத்துவம் கொடுக்கப்போகிறோமே? நம்முடைய நாட்டில் பஞ்சாயத்து ராஜ்யத்தை ஏற்படுத்தி அதன் மூலம் கிராம நிர்வாகத்தை நடத்தப்போகும்போது அவர்களுக்கு குறைவாக சம்பளம் கொடுக்கவேண்டிய காரணம் என்ன? அவர்களுக்குத்தான் கணிசமான அளவு ஊதியம் கொடுக்கப்படவேண்டும், ஊதியம் உயர்த்தப்படவேண்டும் என்பதை இந்த நேரத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். புதியதாக வேலைக்கு வரக்கூடியவர்களுக்கு நல்ல வாய்ப்பு இருக்கிறது இந்த சிபாரிசின் படி. ஆனால் பல நாட்கள் வேலை செய்தவர்களுக்கு அந்த அளவு சம்பள உயர்வு இல்லை என்றுதான் சொல்லவேண்டும். நீண்ட நாட்களாக பணியாற்றியவர்களுக்கு நம்பிக்கை வரக்கூடிய அளவில் அவர்களுக்கு ஊதிய உயர்வு இருக்கவேண்டும். அந்த முறையில் இப்பொழுது அளிக்கவில்லை என்றுதான் சொல்ல வேண்டும். இதை கனம் அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்குக்

கொண்டு வந்து அதற்கு வேண்டியதை அவர் செய்வார் என்று நம்புகிறேன். மத்திய சர்க்கார பஞ்சப்படி, ஊதிய உயர்வு கொடுக்கிற அளவில் ராஜ்ய சர்க்காரும் கொடுக்க முன்வர வேண்டும். இப்பொழுது அதில் மாறுபாடு இருக்கிறது. அப்படி இல்லாமல் இருக்கவேண்டும். அதில் மாறுபாடு இருக்கும் வரையில் அதை வரவேற்க முடியாத நிலையில்தான் இருந்துகொண்டிருக் கிறோம், என்பதைச் சுட்டிக்காட்ட விரும்புகிறேன். மத்திய அரசாங்கத்தையே எல்லா விஷயங்களிலும் பின்பற்றக்கூடிய இந்த அரசாங்கம் தங்களுடைய ஊழியர்களுக்கு சலுகைகளைக் கொடுக்கும் விஷயத்தில் மட்டும் ஏன் அவர்களைப் பின்பற்றக் கூடாது என்று கேட்கிறேன். அப்படிப்பட்ட சலுகைகளை இவர் களுக்கும் காட்ட வேண்டும் என்று இந்த அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறேன். மருத்துவ ஊழியர்களையும் கடைநிலை ஊழியர்களுடைய நிலைமையும் பார்த்தால் 12-லிருந்து 15 வரையில் சம்பளம் வாங்கிக்கொண்டிருந்தவர்களுக்கு எல்லாம் 50 முதற் கொண்டு 60 வரையில் உயர்த்தப்பட்டிருக்கிறது. ஆனால் அதே டிபார்ட்மென்டில் வேறு சில ஊழியர்கள் அவர்கள் திறமை சாலிகளாக இருந்தாலும் அவர்கள் அதிகப்படியான வேலை செய்யக்கூடியவர்களாக இருந்தாலும், 18 முதற்கொண்டு 25 ரூபாய் சம்பளம் பெற்றவர்களுக்கும் இதே சம்பளம்தான் கொடுக்கப்படுகிறது. 12 ரூபாயில் இருந்து 15 ரூபாய் வரையில் சம்பளம் பெற்றவர்கள் எத்தகைய ஊதிய உயர்வைப் பெற்றார் களோ அத்தகைய ஊதிய உயர்வை இவர்களும் பெறவேண்டும். இவர்களுக்குள் இருக்கும் சம்பள வித்யாசத்திற்கு ஏற்றார் போலவே உயர்வும் இருக்கவேண்டும். ஆனால் அப்படி இவர் களுடைய சம்பளம் உயர்த்தப்படவில்லை என்று இந்த நேரத்தில் குறிப்பிட விரும்புகிறேன். இதைக் கவனித்து அவர்களுடைய சம்பளத்தை உயர்த்துவதற்கு அரசாங்கம் வழிவகை செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். 10–00 a.m.

இன்றையதினம் அரசாங்கத்திற்கு வேண்டிய புள்ளி விவரங்களை எல்லாம் சேகரித்துக் கொடுக்கிறவர்கள் கிராம மணியக்காரரும், கணக்குப் பிள்ளைகளும்தான். அரசாங்கத்தி னுடைய வருமானத்தையே அவர்கள்தான் தேடித் தருகிறார்கள். ஆனால் அவர்களுடைய நீண்ட நாளைய கோரிக்கைகள் கவனிக்கப் படவில்லை. அதுபற்றி எங்கள் கட்சியைச் சேர்ந்த ஸ்ரீ எஸ். எம். அண்ணாமலை அவர்கள் வெட்டுப் பிரேரணை கொடுத்திருக்கிறார்கள். அவர்களுடைய கோரிக்கை நியாயமானது. அவர்களுக்கு சாதாரண குமாஸ்தாவுக்குக் கொடுத்திருக்கிற சம்பள உயர்வாவது கொடுத்திருக்கவேண்டும். அவர்கள் பார்ட் டைம் ஊழியர்களாகக் கருதப்பட்டாலும்கூட 24 மணிநேரமும் வேலை செய்யக் கடமைப் பட்டிருக்கிறார்கள். மந்திரிகள் வருகிறார்கள் என்றால் கலெக்டர் டெபுடி கலெக்டருக்குத் தெரியப்படுத்த, அவர் தாசில்தாருக்குத் தெரியப்படுத்த, அவர் இந்தக் கர்ணம், பட்டாமணியம், தோட்டி வரையில் அறிவித்துவிடுகிறார்கள்—எல்லாவிதமான ஏற்பாடு களையும் இவர்கள் செய்கிறார்கள். ஆகவே இந்த கிராம உத்தியோ கஸ்தர்கள் எந்த நேரத்திலும் வேலை செய்கிறார்களே தவிர

ஓய்வு என்பது எடுத்துக்கொள்வதே இல்லை. அவர்களுடைய பிரச்சனையையும் கவனித்து அவர்களுக்கு வேண்டிய வசதிகளையும் செய்துதர வேண்டுமென்று இந்த நேரத்தில் நான் கேட்டுக் கொள்கிறேன். இன்றைக்கு அரசாங்க ஊழியர்களுக்குக் கொடுக் கப்படுகிற சம்பள உயர்வானது போதுமானது என்று சொல்வதற் கில்லை. விலைவாசிகளின் உயர்வைக் கட்டுப்படுத்தாமல் சம்பளத்தை மட்டும் உயர்த்திக்கொண்டே போவதனால் பிரச்னை தீராது. அவர்கள் சம்பள உயர்வு, பஞ்சப்படி முதலியவை போதவில்லை என்று கோரிக்கை எழுப்பினால் உடனே அவர்களை எதிர்க்கட்சிக்காரர்கள் தூண்டிவிடுகிறார்கள் என்று எங்கள் பேரில் குற்றத்தைச் சுமத்தித் தப்பிக்கொள்ள வசதி யில்லை. விலைவாசி ஏற்றம் வருந்தக்கூடிய செய்தியாக இருக்கிறது என்று அரசாங்கத் தரப்பில் இருந்தே ஒத்துக்கொள்ளப்பட்டிருக்கிறது. அதைத் தடுத்து நிறுத்த நடவடிக்கை எடுத்தாலொழிய சர்க்கார் சிப்பந்திகளுக்கு ஓர் திருப்தி இப்போது சம்பளத்தை உயர்த்தியிருப்பதனால் மட்டும் உண்டாகாது என்று குறிப்பிட விரும்புகிறேன்.

இன்னொன்று, கதர் இலாகாவில் வேலை செய்கின்ற ஒரு மேஸ்திரிக்கு அடிப்படைச் சம்பளம் 50 ரூபாய் ஆகவும், பத்து ரூபாய் பஞ்சப்படியாகவும் கொடுக்கப்படுகிறது. எல்லா கீழ்த்தர சிப்பந்திகளுக்கும் ஐந்து ரூபாயாவது சம்பள உயர்வு இருக்க வேண்டும் என்ற சிபார்சு ஏற்றுக்கொள்ளப்பட்டிருந்தாலும் அவர்களுக்கு 47 ரூபாய் சம்பளமாக நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இதைப்பற்றி அவர்கள் எழுதியிருக்கிறார்கள். அவர்களுக்கு எவ்விதமான உயர்வும் இல்லை. இதையெல்லாம் கவனித்துப் பார்த்து அவர்களுக்கு நிவாரணம் அளிக்கவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அதேபோல வெடரினரி காலேஜ் அட்டெண்டர் சம்பளம் 17 ரூபாய், பஞ்சப்படி 37-ஆக, 54-ஆக இருந்தது. ஆனால் இன்றையதினம் அவர்களுக்குக் கொடுத் திருக்கிற உத்தரவைப் பார்க்கிறபோது இப்போது இருக்கிற பஞ்சப்படியை ஐந்து ரூபாய் உயர்த்தி முப்பத்தி ரண்டாகக் கொடுத்திருக்கிறார்கள். இதைப் பார்க்கிறபோது ஏற்கனவே வாங்கின சம்பளத்தில் இருந்து பன்னிரண்டு ரூபாய் குறைவு ஏற்படுகிறது. ஜி.ஓ. 710, (பைனான்ஸ்), தேதி 10—7—1960 உத்தரவுப்படி இப்படி செய்திருக்கிறார்கள். இவற்றை யெல்லாம் பரிசீலனை செய்து, அங்கங்கே உள்ள இந்த மாதிரியான குறைபாடுகளை உடனடியாக நிவர்த்தி செய்ய வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன. வேலூரில் 20—6—1960-ல் நடந்த என்.ஜி.ஓ.-க்கள் மகா நாட்டில் அமைச்சர் அவர்கள் உறுதிமொழி அளித்திருக்கிறார்கள். அவர்களுக்கு ரெட்ராஸ்பெக்டிவ் எபெக்ட் கொடுக்கவேண்டும். மத்திய அரசாங்கம் சம்பள உயர்வு எப்படிக் கொடுத்ததோ அப்படியே இதற்கும் வழிசெய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். பென்ஷன் கொடுக்கிற முறையிலும் சில திருத்தங்கள் செய்யவேண்டியிருக்கிறது. அவர்களுக்கு வேண்டிய சௌகர்யங்களைச் செய்து தரவேண்டும். அந்தக் குறைகளை எல்லாம் கவனித்து நிவர்த்தி செய்தால்தான் இன்றையதினம்

உத்தியோகத்தில் வேலை செய்பவர்களுக்கும், வேலை செய்து ஓய்வு பெற்றவர்களுக்கும் நிம்மதி ஏற்படும் என்பதை இந்த நேரத்தில் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். விடுமுறைகள் அளிப்பதில் ஏற்கனவே இருந்தது போலவே செய்யவேண்டும். ஒரு சனிக் கிழமை விடுமுறை என்றால் அடுத்த சனிக்கிழமை வேலை என்ப தாக மத்திய அரசாங்கத்தில் இருப்பவர்களுக்கு விடுமுறை அளிப்பது போலவே இவர்களுக்கும் செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

கடைசியாக இன்றையதினம் என்.ஜி.ஓ.-க்களுக்கு முக்கியமாக இருக்கிற பிரச்சனை வீட்டுப் பிரச்சனை. அரசாங்கம் கொடுத்திருக் கிற வீட்டு வாடகையைப் பார்க்கும்போது ஐந்து ரூபாய் சிலவிடங் களிலும் ஏழு ரூபாய் சிலவிடங்களிலும், மூன்று ரூபாய் சிலவிடங் களிலும் என்று இப்படி நிர்ணயித்திருக்கிறார்கள். அரசாங்கம் நிர்ணயம் செய்திருக்கிற அளவுக்கு அந்த வாடகையை வைத்துக் கொண்டு எந்த இடத்திலும் வீடு பிடிக்க முடியாத நிலைமைதான் இருக்கிறது. ஆகவே அரசாங்க அலுவலகங்கள் உள்ள தலைமை நகரங்களில் வீடுகளை சர்க்காரே கட்டிக்கொடுத்து சிப்பந்திகளுக்கு அனுகூலம் செய்யவேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். அவர் களுடைய சம்பளத்தில் ஒரு பகுதியை வாடகையாக வாங்கிக் கொள்ளலாம். அப்படி இல்லாத காரணத்தினால் இன்றையதினம் அவர்கள் பத்து மைல், எட்டு மைல் தூரத்தில் இருந்து அலுவல கத்திற்கு வரவேண்டியதாக இருக்கிறது. இதனால் காலதாமத மாகிறது. ஆகவே இடநெருக்கடியைத் தீர்க்க, வீட்டுப் பிரச் சனையை சமாளிக்க சர்க்கார் வீடு கட்டித் தரவேண்டும். ஏதோ வீட்டு வாடகை அலவன்சு கொடுத்துவிடுகிறோம் என்றால் அந்த வாடகைக்குள் இன்றையதினம் வீடு பிடிக்க முடியாத நிலைமை தான் இருக்கிறது.

அவர்கள் சம்பள உயர்வு வேண்டும், பஞ்சப்படி உயர்வு வேண்டும் என்ற கோரிக்கை விடும்போது அவர்களின்மீது எந்த விதமான நடவடிக்கையும் எடுக்கக்கூடாது. அவர்கள் யூனியன் களில் இருந்தோ, அசோஷியன்களில் இருந்தோ ஏதாவது கோரிக் கைகள் வந்தால் அது நியாயமானதாக இருந்தால், அவர்களுக்கு உரிமையும் வசதியும் செய்துதர வேண்டுமென்று இந்த நேரத்தில் சொல்லிக்கொண்டு என் வார்த்தைகளை முடித்துக்கொள்ளுகிறேன்.

**Sri M. KALYANASUNDARAM** :கனம் சபாநாயகர் அவர்களே, இந்த சப்ளிமெண்டரி டிமாண்ட் 3,74,31,000 அதிகமாக செலவு ஏற்பட்டிருக்கிற காரணத்தால் இந்த சபை அனுமதிக்கவேண்டு மென்று கொண்டுவரப்பட்டிருக்கிறது. அதற்கான அடிப்படைக் காரணம் சம்பள கமிஷன் செய்து இருக்கும் சிபார்சுகளை இந்த ஆண்டு ஜூன் மாதம் 1-ம் தேதியிலிருந்து சர்க்கார் முடிவு எடுத்து இருந்ததுதான். இதையொட்டி இந்த விவாதத்தில் நான் சுட்டிக்காட்ட விரும்புவது சம்பள கமிஷன் சிபார்சுகளை எப்படி பரிசீலனை செய்வது என்பது. நம்முடைய நிதி அமைச்சர் அவர்கள் இந்த சிபார்சு மிக அதிகமானது இதற்குமேல் செய்வது

[Sri M. Kalyanasundaram] [23rd August 1960

கஷ்டம் என்று அவர்களுடைய முழு சக்தியையும், திறமையையும் உபயோகப்படுத்தி இந்த வருஷத்திற்கு மூன்று கோடி ரூபாய் ஒதுக்கி அடுத்த வருஷத்திலிருந்து ஐந்து கோடி ரூபாய் அதிக செலவாகும், இன்னும் இறுதியாக ஏழுக் கோடி ரூபாய் அளவிற்கு போய் நிற்கும் என்று கூறியிருக்கிறார்கள். அவர்கள் திருப்தி அடையலாம், ஆனால் எந்த அளவு சர்க்கார் ஊழியர்கள் திருப்தி அடைந்திருக்கிறார்களோ, என்று என்னால் சொல்லமுடியாது. கனம் அமைச்சர் அவர்கள் சர்க்கார் ஊழியர்களைத் திருப்தி செய்தாலும் இன்னும் அதைவிட குறைத்துக் கொள்வதற்கு அதற்கேற்ற உற்சாகம் அளித்து திருப்தி செய்வார்களானாலும்கூட நான் வருத்தப்படமாட்டேன். ஆனால் ரிப்போர்ட்டில் இருக்கும் சம்பள அடிப்படையில் இதை நாம் பரிசீலனை செய்வது கடமையாகும். சர்க்கார் ஊழியர்களில் இதுவரை குறைந்த சம்பள விகிதத்தினர் இருப்பதால் குறைந்தபட்ச சம்பளத்தை நிர்ணயித்திருக்கிறார்கள். ரூபாய் 50—1—60 கிரேட்டுக்கு குறைந்த சம்பளம் வாங்கக்கூடியவர் இன்னும் யாரும் இருக்கமாட்டார்கள். குறைந்தபட்ச சம்பளம் 50 ரூபாயோடு பஞ்சப்படி 10 ரூபாய் கொடுக்சப்படும். ஆக 60 ரூபாய்க்குக் குறையாமல் ஒவ்வொருவரும் சம்பளம் பெறுவார்கள். இது கடைநிலை ஊழியர்களினுடைய நிலை. இதற்கு முன்பு இருப்பதோடு அதை ஒப்பிட்டுப் பார்த்தால் எவ்வளவு அதிகம் என்பதை நாம் புரிந்துகொள்ளமுடியும். முன்பு இருந்த விகிதம் ரூபாய் 18—1—25. பஞ்சப்படியாக அவர்களுக்கு 35 ரூபாயிலிருந்து 36 ரூபாய் வரை கொடுத்துக் கொண்டிருக்கிறார்கள். குறைந்தது ஒவ்வொரு கடைநிலை ஊழியர் வாங்கக்கூடிய சம்பளம் 53 ரூபாய். அதிகபட்சம் வாங்கக் கூடியது 61 ரூபாய்; 53-ல் இருந்து 61 ரூபாய் வரை வாங்குவதை இப்போது 60-லிருந்து 80 வரை உயர்த்தியிருக்கிறார்கள். பத்திரிகையிலே படித்திருக்கிறோம். அறிக்கையைப் பார்க்கும்போது ஒவ்வொருவருக்கும் உடனடி ஏழு ரூபாய் கிடைக்குமோ என்றுகூட நினைக்கலாம். ஆனால் பெரும்பாலான கடைநிலை ஊழியர்கள் இப்போது இருக்கும் முறைப்படி பார்க்கும்போது, ஏழு, எட்டு வருஷம் சர்விஸ் ஆனவர்களுக்கும்கூட அவர்கள் வாங்கும் 53 ரூபாய்க்கு மேல் இரண்டு அல்லது மூன்று ரூபாய்தான் கிடைக்கும். ஆனால் அதற்கும் பாதுகாப்பு கொடுத்திருக்கிறார்கள். குறைந்தபட்சம் ஐந்து ரூபாய் கிடைக்கும். மூன்றுவது பிரிவில் வேலை செய்கிறவர்களாக இருந்தாலும் நான்காவது பிரிவில் வேலைசெய்கிறவர்களாக இருந்தாலும் ஐந்து ரூபாய்க்கு குறையாமல் ஜூன் மாதம் முதல் தேதி இந்த திட்டம் அமுலாகும். அந்த தேதியிலிருந்து ஒவ்வொருவருக்கும் சம்பள உயர்வு ஐந்து ரூபாய்க்கு குறையாமல் பெற வேண்டும் என்பது தெளிவாக புரிந்து கொண்டிருக்கிறேன். எவ்வளவு அதிகமாக கொடுப்பதாக இருந்தாலும்கூட 25 ரூபாய்க்கு அதிகமாக யாரும் பெறக்கூடாது. ஒரு சில காடிகரி தவிர ஜூனியர் என்ஜினியர் போன்றவர்கள் தவிர மற்றயாருக்கும் 25 ரூபாய்க்கு மேல் பெற வாய்ப்பு கிடையாது. ஐந்து ரூபாய்க்கு குறைவாக பெறவும் முடியாது. அந்த அடிப்படையிலே பார்க்கும்

23rd August 1960] [Sri M. Kalyanasundaram]

போது பெரும்பாலோர் ஐந்து ரூபாய்க்கு சம்பள உயர்வு ஜூன் மாத முதல் தேதியிலிருந்து ஏற்கனவே பெற்றிருந்த சம்பளம் பஞ்சப்படி அவைகளுக்கு மேலாக கிடைக்கும் என்பதை நான் புரிந்துகொள்கிறேன்.

ஒரு குமாஸ்தாவின் நிலைமையை எடுத்துப் பார்த்தால் அவர்களுக்கு அதற்கு முன்னால் 45 ரூபாய் ஆரம்பமானதை 90 ரூபாயில் ஆரம்பித்திருக்கிறார்கள். ஏற்கெனவே இருந்த சம்பளமும், பஞ்சப் படியும் 84 ரூபாய் ஆகும், 131 ரூபாயில் முடிவடைகிறது. ஆனால் அதுவரையில் பதவி உயர்வு இல்லாமல் யாரும் இருக்க மாட்டார்கள். 100-ல் இருந்து 150-ஆக உயரும். மத்திய அரசாங்க ஊழியர்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் இவர்களுடைய சம்பள விகிதம் மிகவும் குறைவாக இருக்கும். ராஜ்ய சர்க்கார் கடைநிலை ஊழியர்களுக்கு 60 ரூபாயில் ஆரம்பமாகிறது. அதிக பட்ச ரூபாய் 70. மத்திய சர்க்காரில் ஆரம்பம் ரூ. 80, சம்பளம் 70, பஞ்சப்படி ரூபாய் 10. எண்பது ரூபாயிலிருந்து ஆரம்பமாகி 95 ரூபாய் வரை போகும். இதுபோல் மத்திய சர்க்காரில் லோயர் டிவிஷன் குமாஸ்தாவுக்கு 120 ரூபாயில் ஆரம்பித்து 200 ரூபாய் வரை போகும். நம்முடைய ராஜ்ய சர்க்காரின்கீழ் வேலை செய்யும் குமாஸ்தாவுக்கு 100 ரூபாயில் ஆரம்பித்து 150 ரூபாய் வரைக்கும் போகும். மத்திய சர்க்கார் சம்பள விகிதம், ராஜ்ய சர்க்கார் சம்பள விகிதம் இவ்விரண்டிற்கும் இருக்கும் வித்தியாசம் தொடர்ந்து நீடித்திருக்கிறது என்பதை சுட்டிக்காட்டியிருக் கிறேன். சம்பள உயர்வு கிடைக்கும் என்பது உண்மையானாலும் அடிப்படை சம்பள விகிதத்திலே இந்த ஏற்றத்தாழ்வு தொடர்ந்து நீடிக்கக்கூடிய சிபார்சைத்தான் இந்த சம்பளக் கமிஷன் சிபாரிசு செய்திருக்கிறது.

பஞ்சப்படி சம்பந்தப்பட்ட மட்டில் மத்திய சர்க்கார் ஊழியர் களுக்கு கிடைக்கும் அளவு அப்படியே ஏற்றுக்கொள்ளவேண்டு மென்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த சிபார்சை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள். அதோடு வீட்டு வாடகை சம்பந்தமாக சர்க்கார் அங்கங்கே எல்லோருக்கும் வீட்டு வாடகை அலவன்ஸ் கிடைக்கக்கூடிய ஒரு உத்திரவை பிறப்பித்திருக்கிறார்கள். சென்னை நகரத்திலே 10 ரூபாயிலிருந்து 20 ரூபாய் வரைக்கும் வீட்டு வாடகை அலவன்ஸ் கிடைக்கும். கோயம்புத்தூர், திருச்சி போன்ற நகரங்களில் ஐந்து ரூபாயிலிருந்து 12 ரூபாய் வரை கிடைக்கும். அதுபோக மற்ற நகரங்களில் எல்லாம் மூன்று ரூபாய்தான் வீட்டுவாடகை கிடைக்கும். நான் கொடுத்திருக்கும் வெட்டுப் பிரேரேபணைகளை எல்லாம் ஆட்சேபிக்கக்கூடிய ஒரு அங்கத்தினர்கூட வீட்டு வாடகை அலவன்ஸ் மிகவும் குறைவானது என்று அவர்கள் குறிப்பிட்டதை நான் இந்த சபையின் கவனத் திற்குக் கொண்டுவர விரும்புகிறேன்.

அதுபோக இவ்வளவு சம்பள உயர்வு கொடுப்பதாக இதில் அறிவிக்கப்பட்டிருந்தும் இதற்கு ஈடாக என்ன செய்து கொண்டிருக்கிறார்கள் என்பதை பார்க்கவேண்டும். இதற்கு ஈடாக வேலை நேரம் அதிகப்பட்டிருக்கிறது. நான் இதை ஆட்சே

[Sri M. Kalyanasundaram] [23rd August 1960

பிக்கவில்லை. இருந்தாலும் மத்திய சர்க்கார் காரியாலயங்களில் ஆறு மணி நேரம் வேலைநேரம் இருக்கிறது. ராஜ்ய சர்க்கார் காரியாலயங்களில் ஏற்கனவே இருந்ததைவிட இப்போது அரை மணி நேரம் அதிகரித்திருக்கிறார்கள்.

இதன் மூலம் வருஷத்திற்கு சராசரி 24 நாட்கள் மொத்தம் வேலை அதிகமாக செய்ய வேண்டியிருக்கிறது. பூர்ண விடுமுறை நாட்களை குறைத்திருக்கிறோம். ஏற்கனவே காரியாலயங்கள் 26 விடுமுறை நாட்கள் பெற்று வந்தன. இனி, அது 15 நாள்கள் பொதுவாகவும், மூன்று நாள்கள் அவரவர்கள் இஷ்டப்படி எடுத்துக்கொள்ளக் கூடியதாகவும் ஆக 18 நாட்கள் விடுமுறை நாட்கள், அதிலும் எட்டு நாட்கள் அதிகரித்திருக்கின்றன. காஷ்வல் லீவ், அவரவர்கள் எதிர்பாராத காரியங்களுக்காக சம்பளத்தோடு லீவு எடுக்கும் நாட்கள், மூன்று தினங்கள் குறைக்கப்பட்டிருக்கின்றன. பதினைந்து நாட்களில் இருந்து 12 நாட்களாக்கப்பட்டிருக்கின்றன. ஆக, வருடம் ஒன்றுக்கு 35 நாட்கள் அதிகமாக வேலை செய்ய நேரிடும். பன்னிரண்டு மாதங்களுக்குப் பதிலாக 13 மாதங்கள் வருடம் ஒன்றுக்கு வேலை செய்வதாகத்தான் அர்த்தம். அப்படி 13 மாதங்கள் வேலை பெற்றுக்கொண்டு, 60-க்கு குறையாது சம்பளம் கொடுக்கிறார்கள். கொடுக்கக்கூடிய சம்பளத்திற்கு ஏற்றவாறு, அதற்கு அதிகமாகவே வேலை பெற்றுக் கொண்டுதான் இந்த சம்பளம் கொடுக்கிறார்கள் என்பதை நான் இங்கு சுட்டிக் காட்ட விரும்புகிறேன். பதின்மூன்று குமாஸ்தாக்களுக்கு ஒரு குமாஸ்தா மிச்சமாகிறது. பன்னிரண்டு குமாஸ்தாக்கள் 13 குமாஸ்தாக்கள் வேலையைச் செய்வார்கள். அந்த அளவு லீவ் ரிசர்வை குறைத்துக் கொள்ளலாம். ஆக, இதில் ஓரளவு மறைமுகமான சிக்கனம் இருக்கிறது. சர்க்கார் மூன்று கோடி அதிகமாக செலவு செய்தாலும், அதனால் கிடைக்கக்கூடிய பலனைப் பார்க்கும்போது, இன்றுள்ள ஊழியர்களை வைத்துக்கொண்டு அதிகப்படி வேலை கிடைக்கும் என்பதால், பாராட்டத்தக்க அளவிற்கு சம்பள உயர்வு கொடுத்துவிட்டதாக என்னால் ஒப்புக் கொள்ள முடியவில்லை என்பதை எடுத்துக்கூற விரும்புகிறேன். பன்னிரண்டு மாதங்களுக்குப் பதிலாக 13 மாதங்கள் வேலை செய்து இந்த சம்பள உயர்வு பெறக்கூடிய நிலைதான் இருக்கிறது. அதிக வேலை செய்வதை நான் ஆட்சேபிக்கவில்லை. அப்படி அதிகப்படி வேலை வாங்கிக்கொண்டு, அத்தியாவசிய உணவுப் பண்டங்களை பெற்று வாழ்க்கையை நடத்துவதற்குள்ள ஒரு சம்பள விகிதத்திற்கு இதில் உத்தரவாதம் இருக்கிறதா? என்பதை அமைச்சர் அவர்கள் சற்று சிந்தித்துப் பார்க்க வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். எதிரில் பாராட்டி விட்டு கூட்டத்தில் ஏறி குறை சொல்லிக் கொண்டிருப்பதில் அர்த்தமில்லை. அமைச்சர் அவர்கள் சென்ற மகாநாட்டில் அவர்களைப் பாராட்டியும் அமைச்சர் அவர்களை பாராட்டியும் பரஸ்பரம் பாராட்டிக் கொண்டார்கள். மாலை பெற்றுக் கொண்டார்கள். அமைச்சர் அவர்கள் இங்கு வந்த பிறகு அவர்களது குறைகள் தானாகவே வர ஆரம்பித்து விட்டன.

என்னென்ன குறைகள் இருக்கின்றன என்பதை புரிந்து கொள் வதில் கவனம் செலுத்த வேண்டுமென்பதற்காகத்தான் சில விஷயங்களை நான் அவர்கள் கவனத்திற்கு கொண்டுவர விரும்பு கிறேன். மத்திய அரசாங்க நிதியமைச்சர் அவர்களோடு ஒப்பிட்டுப் பார்த்தால் நமது நிதியமைச்சர் அவர்கள் மூன்று கோடி செலவு செய்து விட்டு சர்க்கார் ஊழியர்களிடமிருந்து பாராட்டுதல்களை பெற்று விட்டார்கள், அவர்களோ 13 கோடி செலவு செய்தும் ஸ்ட்ரைக்கை கொண்டு வந்து விட்டார்கள். அதைப் பார்க்கும்போது நமது நிதியமைச்சர் அவர்கள் தன்னைப் பாராட்டிக்கொள்ளலாம். அதை ஒப்புக்கொள்கிறேன். இன்றுள்ள சம்பள உயர்வு, பஞ்சப்படி இவைகள் நமக்கு தேவைப்படும் ஒரு புது நிர்வாகத்தை அமைப்பதற்கு போதுமானதாக இருக்குமா என்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டும். இந்த ரிப்போர்டில் கண்டுள்ள சம்பள விகிதங்கள், இவ்வளவு ஏற்பாடுகள் இவை யெல்லாம் கொடுக்கிறோம், அதற்குத் தக்கப்படி வேலை வாங்குகிறோம் என்பதற்கல்ல. சம்பளத்திற்காக வேலை செய்யும் கூலிப் பட்டாளத்தை தயாரிப்பதல்ல, பொது நிர்வாகம் இவர்களைக் கொண்டுதான் நாம் நமது தேசத்தின் முன்னேற் றத்தை உருவாக்க வேண்டியிருக்கிறது. பொதுத் துறை யிலானாலும் சரி, அல்லது தனியார் துறையில் நடக்கிற நிகழ்ச்சி களானாலும் சரி இவர்கள் முயற்சி மூலமாகத்தான், இவர்கள் உதவி கொண்டுதான் நடைபெறுகின்றன. சர்க்கார் காரியாலயங் களில் காகிதங்களை பரிசிலனை செய்து உத்தரவு பிறப்பிக்கிறார்கள் என்று சொன்னால் அது மூன்று கோடி மக்களின் வாழ்க்கை சம்பந்தமான பிரச்சனைகள் தீர்க்கப்படுகின்றன. நம் நாட்டு வளங்களை பயன்படுத்த எப்படி ஐந்தாண்டுத் திட்டங்கள் போட்டு தேசத்தின் முன்னேற்றத்தைக் கொண்டு வருகிறோமோ அதற்கு முக்கியமான, திறமையாக வேலை செய்யும் ஒரு பொது நிர்வாகம் அவசியம் தேவை. நம் நாட்டிலுள்ள நதிகள், மலைகள், காடுகள், கடல், மண் இவ்வளங்களைக் கொண்டு நம் மக்களுக்கு பணி புரிய, இவைகளை இணைத்து வைக்கக்கூடிய சக்தி வாய்ந்தது பப்ளிக் அட்மினிஸ்ட்ரேஷன். அவர்களின் உற்சாகம், உழைப்பு இவைகளைப் பொறுத்தே நம் தேசத்தின் முன்னேற்றம் இருக் கிறது. அப்படி அவர்கள் ஒத்துழைப்பைப் பெறவும், அவர் களுக்கு உற்சாகம் ஊட்டவும் தான் நாம் சம்பளம் என்பதை நிர்ணயித்திருக்கிறோம். அதற்காகத்தான் அலவன்ஸ் போன்ற வசதிகள் செய்து கொடுக்கிறோம். அந்த அடிப்படையில் பார்க்கிறபோது சம்பளம் என்பது எப்படி நிர்ணயம் செய்யப் பட்டிருக்கிறது என்று பார்ப்போம். ஏற்கெனவே இருந்த வாழ்க்கைத்தரம் முன்னேறுவதற்கு முயற்சி செய்யப்படவில்லை. விலைவாசி உயர்வால் வாழ்க்கைத்தரம் குறைந்து போயிருக்கிறது. அதைத் தடுக்கவேண்டும். சர்க்கார் ஊழியர்களாகட்டும், அல்லது தனி முதலாளிகள் கீழ் வேலை செய்யும் தொழிலாளிகள் ஆகட்டும், இதை எந்த அளவிற்கு தடுக்கிறோமோ அந்த அளவிற்குத்தான் அவர்கள் ஒத்துழைப்பும், அமைதியும் ஏற்படும். இதை தடுக்க வில்லை என்றால் அந்த அளவு ஒத்துழைப்பு குறையும், ஸ்ட்ரைக்கு

களும் ஏற்படும். இதை அமைச்சர் அவர்கள் தங்கள் மனதில் கொண்டால் பரவாயில்லை. அமைச்சரின் கருத்தும் சரி, இந்த பே கமிஷன் ரிப்போர்ட்டில் அடங்கியுள்ள கருத்தும் சரி, விலைவாசி உயர்வுக்குக் காரணம் சம்பள உயர்வு கொடுப்பது என்று. அது ஒரு முக்கியமான காரணமா என்றால் அது முக்கியமான காரணம் அல்ல. விலைவாசி உயர்ந்த பிறகுதான் சம்பள உயர்வு கொடுக்கிறோமே தவிர விலைவாசி உயராமல் சம்பள உயர்வு கொடுக்கவில்லை. விலைவாசி உயர காரணம் என்ன என்று சிந்திக்க வேண்டும். அதை பரிசீலனை செய்ய வேண்டும். உற்பத்தி பெருகாத காரணத்தினால் விலைவாசி ஏறுகிறதா? பற்றாக்குறை இருந்து அதனால் விலை ஏறுவது ஒரு இயல்பு. ஆனால் உற்பத்தி பெருகிய பிறகும் விலைவாசி ஏறுகிறது, அதற்கு காரணம் என்ன? விலைவாசியை ஒரு நிலையில் வைப்பதற்கு சர்க்காருக்கு அதிகாரம் இல்லையா? என்பதை சிந்தித்துப் பார்க்க வேண்டும். மத்திய அரசாங்கத்தால் நியமிக்கப்பட்ட முதல் சம்பள கமிஷன் வாக்களித்த ஜோஸ்யம் பொய்த்து விட்டது. பொருளாதார நிபுணர்களின் ஜோஸ்யமும் பொய்த்து விட்டது, விலைவாசி ஓரளவில் நிற்கும் என்பது. நமது அமைச்சர் அவர்கள் உணவு விஷயமாக விவாதத்தின்போது சொல்லக் கூடிய யோசனைகளுக்கு பதில் கூறும்போது நமது உணவு அமைச்சர் அவர்கள் கொடுத்த வாக்குறுதி, ஜோஸ்யம் எல்லாம் நிறைவேறவில்லை. தொடர்ந்து விலைவாசி ஏறிக்கொண்டே போகிறது. இந்த சம்பளக் கமிஷன் அறிக்கை வந்த பிறகும் அது தொடர்ந்து ஏறிக்கொண்டே போகிறது. அது, சம்பளக் கமிஷன் ரிப்போர்ட் வந்ததினால் என்று சொன்னால் ஒப்புக்கொள்ளமாட்டேன். ஒவ்வொரு மாதமும் தொடர்ந்து ஏறிக்கொண்டே போகிறது. அதற்கு காரணம் என்ன? நமது ராஜ்யத்தில் உணவுப் பொருள்களின் உற்பத்தி 1959-ல் "ரிக்கார்ட் ப்ரொடக்ஷன்" என்று மத்திய அரசாங்க நிதி அமைச்சர் அவர்கள் "எக்கனாமிக் சர்வேயில்" குறிப்பிட்டிருக்கிறார்கள். அப்படி உற்பத்தி பெருகியும் கூட விலைவாசி ஏறிக்கொண்டே போவதற்கு காரணம் என்னவென்று சிந்தித்துப் பார்க்க வேண்டும். நமது பிரதம மந்திரி அவர்கள் சொல்லியிருக்கும் ஒரு விஷயத்தை நான் இந்த சபையின் கவனத்திற்குக் கொண்டுவர விரும்புகிறேன். சோஷியலிஸ சமுதாயத்தை உறுதியாக நிறுவப் போகிறோம் என்று நேற்று கூட பார்லிமெண்டில் அவர்கள் கூறியிருக்கிறார்கள். அதற்கு அவசியமாக விலைவாசியை எந்த அளவிற்கு கட்டுப்படுத்த வேண்டியிருக்குமோ அதற்குள்ள உறுதியான நடவடிக்கைகளை எடுத்தே தீர வேண்டுமென்று ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இதைத்தான் நாங்கள் பல ஆண்டு காலமாக வற்புறுத்தி வருகிறோம். இதற்குள்ள நடவடிக்கைகளை உண்மையாகவே எடுப்பார்களேயானால் சச்சரவுகள் அகன்று, அதற்குப் பதிலாக அமைதியும், நிர்வாகத்தின் உற்சாகமும் ஏற்படுவது சாத்தியமாகும்.

(Deputy Speaker in the Chair.)

உற்பத்தியான பொருள்கள் எங்கு போய் விட்டது? அவை, உழைப்பவர்களின் பக்கம் போகவில்லை. அதற்குப் பதிலாக யார்

இடத்தில் வசதியிருக்கிறதோ அவர்கள் பக்கம் போய்விடுகிறது. உற்பத்தி பெருகியும் கூட உழைக்கக்கூடிய மக்களின் வாழ்க்கைத் தரம் உயரவில்லை. அதற்காக ஒரு பெரிய ஆராய்ச்சி நடத்த வேண்டிய அவசியமில்லை. பிரதம மந்திரி அவர்கள் அது பற்றி ஆராய வேண்டுமென்று சொல்கிறார்கள். அவர்கள் கட்சியைச் சார்ந்தவர்களை திருப்தி செய்ய அதைக் குறித்து ஆராய்ச்சி செய்ய வேண்டியிருக்கலாம். உற்பத்தியாகிற செல்வம் எங்கு போகிறது என்பது பற்றி ஒரு புது ஆராய்ச்சி தேவையில்லை. யாரிடத்தில் பண வசதியிருக்கிறதோ, யாரிடம் பணம் குவிந்து கிடக்கிறதோ அவர்களிடமே போய் சேர்ந்து அவர்கள் தங்கள் 10-30 a.m.
இஷ்டம்போல் விலைவாசியை உயர்த்துகிறார்கள். அது, தடுக்கப் படவேண்டும். அப்பொழுதுதான் உற்சாகமாக பணி புரியக் கூடிய ஒரு நிர்வாக இயந்திரத்தை நாம் அமைக்க முடியும். அதுவும் எந்தளவு நிறைவேறுமோ, தெரியவில்லை. நம்முடைய டெவலப்மென்ட் கமிஷனர்கள் மகாநாட்டில் கொடுத்த ஒரு அறிக்கையை நான் பார்க்க நேர்ந்தது.

"There is no country in the world which has such high ideals as in India but there is no country in the world where the gap between the ideals and performance is so wide."

என்று சொல்லப்பட்டிருந்தது. நம்முடைய நாட்டில் போட்டிருக்கும் உயர்ந்த லட்சியங்களைவிட உயர்ந்த லட்சியங்கள் ஒன்றும் கிடையாது. அதே சமயத்தில் அந்த லட்சியங்களை நிறைவேற்றுவதில் இருக்கின்ற வித்தியாசங்கள் நம் நாட்டைப் போல் வேறு எந்த நாட்டிலும் கிடையாது என்று சொல்லப்பட்டிருக்கிறது. இது யாருடைய வார்த்தை, பிரதம மந்திரி ஜவஹர்லால் நேரு அவர்களுடைய வார்த்தை. லட்சியங்களை எல்லாம் பெரியதாக வைத்திருக்கிறோம், அதே சமயத்தில் அதை நிறைவேற்றுவதிலும் பெரிய வித்தியாசங்களையும் வைத்துக் கொண்டிருக்கிறோம் என்று சொல்லியிருப்பதைப் பார்த்தால், இதை யாருக்கு சொன்னார்களோ, தன்னுடைய அரசாங்கத்திற்குத்தான் சொன்னார்களோ, அல்லது ராஜ்ய சர்க்கார்களுக்குத்தான் சொன்னார்களோ, அல்லது தனது கட்சிக்காரர்களுக்குத்தான் சொன்னார்களோ தெரியவில்லை. . . .

THE HON. SRI C. SUBRAMANIAM : அல்லது எதிர்கட்சிக்காரர்களுக்குத்தான் சொன்னார்களோ . . .

SRI M. KALYANASUNDARAM : அப்படியும் இருக்கலாம். நாம் பெரிய லட்சியங்களையெல்லாம் நிறைவேற்ற வேண்டிய நிலைமையில் இருக்கிறோம். அதே சமயத்தில் இதற்கு தடங்கல்கள் பல இருக்கின்றன என்பதும் உண்மை, இதற்கு உண்மையான பொறுப்பாளி யார் என்பதை நாம் கண்டு பிடிக்கவேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக போடப்படுகிற லட்சியங்களின் மீது நம்பிக்கை இருக்கவேண்டும். அதோடு அதை நிறைவேற்றி வைப்பதிலும் நல்ல முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். அப்போதுதான் விலைவாசி உயர்வை தடுக்க முடியும். அதல்லாமல் எவ்வளவுதான் சம்பளத்தை உயர்த்தினாலும், அதன்

மூலம் கிடைக்கின்ற பலனை அவர்கள் அனுபவிக்க முடியாது. ஆகவே உண்மையான பலனை அவர்கள் அனுபவிக்க வேண்டு மென்றால் விலைவாசியின் உயர்வை தடுக்கவேண்டும் என்பதை இந்தச் சந்தர்ப்பத்தில் வலியுறுத்திக்கொள்ள ஆசைப்படுகிறேன். இப்படிப்பட்ட ஒரு ரிப்போர்ட்டை மிகவும் சிரமப்பட்டு தயாரித்து அதை அமல் நடத்தும் போது மேலும் விலைவாசி உயர்ந்து கொண்டே போகுமானால், அதிலும் இந்த ரிப்போர்ட் பிரகாரம் சம்பளங்கள் எல்லாம் நிர்ணயிப்பதற்கு இன்னும் இரண்டு மூன்று மாதங்கள் ஆகலாம், அதன் பின்னும், இரண்டு மூன்று மாதங்களின் பாக்கித் தொகையாக 20, 30 ரூபாய் சேர்ந் தாற் போல் கிடைக்கும்—இப்போது வேண்டுமானால் அவர் களுக்கு ஓரளவுக்கு உற்சாகம் இருக்கலாம். ஆனால் பூரா சம்பளம் வாங்கிய பின்னால் இருக்கின்ற விலைவாசி உயர்வோடு இதை ஒப்பிட்டுப் பார்த்தால் மீண்டும் ஒருவித ஏமாற்றம் தான் ஏற்படுமே அல்லாது இந்த சம்பள உயர்வினால் அவர்கள் பெரிய நன்மையை எதிர்ப்பார்க்க முடியாது. வேலையில்லா நாட்களை குறைத்ததின் காரணமாகவோ அல்லது வேலை நேரத்தை அதிகரித்ததின் காரணமாகவோ அவர்கள் பெரிய பலனை எதிர்ப் பார்க்க முடியாது. அதற்கு மாறாக அதிகமான நஷ்டத்தைத் தான் எதிர்ப்பார்க்க முடியும் என்பதை கனம் நிதி அமைச்சர் அவர்களுடைய கவனத்திற்கு கொண்டு வர விரும்புகிறேன். அவருடைய முயற்சிகள் எல்லாம் விலைவாசி உயர்வை குறைப் பதில் ஈடுபட வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன். இம்மாதிரி யான விலைவாசி உயர்வினால் தான் சர்க்கார் ஊழியர்களிடையே வேலை நிறுத்தங்கள் ஏற்படுகிறதே தவிர அவர்களுடைய பேராசை இதற்கு காரணமல்ல என்பதை கனம் அமைச்சர் அவர்கள் மனதில் கொள்ளவேண்டும் என்று கேட்டுக்கொள் கிறேன். எதிர்கட்சிகளை தாக்குவதற்கு வேண்டுமானால் வேறு ஏதாவது காரணங்களை சொல்லிக் கொள்ளட்டும். ஆனால் எதிர் கட்சிகளினால் தான் ஏற்படுகிறது என்று சொல்வதை யாரும் நம்ப மாட்டார்கள். அதே நேரத்தில் வேலை நிறுத்தம் என்பது ஒருவர் தூண்டிவிட்டு ஏற்படுகிற நிகழ்ச்சி அல்ல என்பதையும் கனம் அமைச்சர் அவர்கள் உணர்ந்து கொள்ள வேண்டும். விலை வாசியின் உயர்வின் காரணமாக ஏற்படுகின்ற கஷ்டங்களை தொழி லாளர்களால் சகிக்க முடியவில்லை என்கிற முடிவுக்கு வந்த பின்னால் தான் வேலை நிறுத்தம் தோன்றுகிறதே தவிர எதிர்கட்சிகளின் தூண்டுதலினால் அல்ல என்பதை அமைச்சர் அவர்கள் வேண்டு மானால் ஒப்புக்கொள்ளமாட்டார்கள். ஆனால் உண்மை அதுதான் என்பதை மக்கள் அறிவார்கள். ஆனால் ஒரு விஷயத்தை நாம் மறந்துவிட முடியாது, வேலை நிறுத்தம் தோன்றுகிறபொழுது, எதிர்கட்சிகள் விலகி நிற்க வேண்டும் என்று சொல்வது சரியல்ல, வேலை நிறுத்தம் ஏற்படாமல் இருக்க வேண்டியதை செய்யவும் மாட்டார்கள், அதே நேரத்தில் எதிர்கட்சிகள் வேலை நிறுத்தம் ஏற்பட்டால் அதில் சேர்ந்து கொள்ளவும் கூடாது என்று சொல்வது சரியல்ல, அதை விட்டுவிட்டு எதிர்கட்சிகள் வேலை நிறுத்தம் ஏற்பட்டால் விலகி நிற்கட்டும், நாங்களும் ஒரு கை

23 rd August 1960] [Sri M. Kalyanasundaram]

பார்த்துக் கொள்கிறோம் என்று சொல்வது ஜனநாயக முறை யாகாது. அது மட்டுமல்ல, நம் நாட்டினுடைய பொது நிர் வாகத்தை அமைதியாக கொண்டு போவதற்கு அது உதவி அளிக்காது என்பதை கூறிக்கொள்ள விரும்புகிறேன். உழைக்கக் கூடிய மக்களின் உரிமைகள் பாதிக்கப்படாதவாறு நாட்டினுடைய திட்டங்கள் வகுக்கப்பட வேண்டிய காலம் இது. இதே அடிப் படையில் தான் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் பல உயர்ந்த இலட்சியங்கள், பல உயர்ந்த திட்டங்கள் எல்லாம் சொல்லப்பட்டன. ஆனால் இந்தக் காலத்தில் விலைவாசிகள் எல்லாம் எவ்வாறு இருந்தன, தொழிலாளர்களின் நிலைமை எவ்வாறு இருந்தன, என்பதைப்பற்றி எல்லாம் நாம் அனுபவத் தில் பார்த்தோம். ஆனால் இவைகளில் எல்லாம் ஒருவிதமான பூர்த்தியான திருப்தி கிடைக்கவில்லை என்பதையும் பார்த்தோம். ஆகவே மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் எவைகளை எல்லாம் சேர்ப்பது என்று எண்ணிக்கொண்டிருக்கின்ற இந்த சந்தர்ப்பத் தில் நமது நிதியமைச்சர் அவர்கள் தங்களுடைய செல்வாக்கை உபயோகித்து மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டக்காலத்தில் விலை வாசி நியாயமான அளவில் இருக்கும்படியாக முயற்சி எடுத்துக் கொள்ளவேண்டும், அப்போது தான் அடுத்த ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் நமது நாட்டினுடைய முன்னேற்றத்தை எதிர்பார்க்க முடியும், அதை விட்டு விட்டு எதிர்கட்சிகளை எப்போதும் தூற்றிக்கொண்டிருக்க வேண்டும், எதிர்கட்சிகளினுடைய செல் வாக்கை குறைக்க வேண்டும் என்பதில் மட்டும் கவனம் செலுத்தக்கூடாது என்று கேட்டுக்கொள்கிறேன். அதே சமயத் தில் சர்க்கார் ஊழியர்கள், ஆளும் கட்சிக்காரர்கள் தான் நமக்கு சாதகமாக ஏதாவது பாடு படுவார்கள் போல் தோன்றுகிறது என்றுள்ள எண்ணத்தை ஏற்படுத்திக்கொள்வார்களேயானால் அது திறமையான நிர்வாகத்தை ஏற்படுத்துவதற்குரிய சாதனை யாக இராது என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

மேலும் இந்த சிபாரிசுகளில் சம்பள உயர்வை ஒரு பக்கத்தில் ஏற்படுத்தி விட்டு, வேலை நேரங்களை அதிகரிப்பதைப் பற்றியும் கூறிவிட்டு, இன்னும் சில சிக்கனங்களுக்கு யோசனை கூறியிருக் கிறார்கள். சிக்கனம் என்ன என்று அவர்கள் முக்கியமாக குறிப் பிட்டிருப்பது என்னவென்றால் கடை நிலை ஊழியர்களின் எண்ணிக்கையை குறைக்க வேண்டும் என்பது தான். அதாவது பியூன் என்று இருக்கின்ற கடைநிலை ஊழியர்களைப்பற்றி குறிப் பிட்டிருக்கிறார்கள். பியூன் என்ற வார்த்தையே எனக்குப் பிடிக்கவில்லை. வெள்ளைக்காரர் காலத்தில் ஆடம்பரத்திற்காக இவ்வாறு வைத்திருக்கலாம். ஒரு அதிகாரி எங்காவது போனால் அவர்களோடு பின்னால் நான்கு சேவர்கள் போகவேண்டும் என்று முன்னால் ஏற்படுத்தி வைத்திருந்தார்கள். ஆனால் இப்போது அதிகாரிகள் எல்லாம் மக்களுடைய ஊழியர்கள் என்று நினைக்கக் கூடிய காலம். ஆகவே படாடோபத்திற்காக பியூனை வைக்க வேண்டியதில்லை என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். அதிலும் இப்போது பியூன் என்றிருக்கின்ற **Category** -யே அவசியமில்லை,

[Sri M. Kalyanasundaram] [23rd August 1960

வேண்டுமென்றால் அட்டன்டர் முதல் கிரேட், இரண்டாவது கிரேட், மூன்றாவது கிரேட் என்று ஏற்படுத்தி வைத்துக்கொள்ளலாம், பியூன்களை மந்திரிகளோ அல்லது, பெரிய அதிகாரிகளோ வைத்துக்கொள்ள வேண்டாம் என்று நான் சொல்லவில்லை. அதே போன்றுதான் ஆபீஸ்களில் ஒரு பைலை ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு எடுத்து வைப்பதற்கும், ஒரு இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்கு கொண்டு போவதற்கும் 100 ரூபாய், 150 ரூபாய் சம்பளம் வாங்கக் கூடிய கிளார்க்குகளின் வேலை நேரத்தை வீணாக்குவதில் எந்த விதமான பிரயோசனமும் இல்லை, அவர்களுடைய திறமையான சக்தியைத் தான் விரயமாக்குவதாக இருக்கும். இதற்கெல்லாம் பியூன்களை உபயோகித்தால் ஓரளவுக்கு அலுவல் நேரங்களில் சரியானபடி வேலை நடப்பதற்கு உதவியாக இருக்கும். ஆகவே பியூன்களை குறைப்பதினால் சிக்கனம் ஏற்படும் என்பதை என்னால் நம்ப முடியாது. இதைத்தான் அவர்கள் சிக்கனம் என்று குறிப்பிட்டிருக்கிறார்கள். ஆடம்பரத்திற்காக பியூன்கள் வேண்டாம் என்று சொல்வதை நான் ஆட்சேபணை செய்யவில்லை. அதோடு பியூன்கள் என்றிருப்பதை அட்டன்டர் என்று வைத்துக் கொள்ளலாம். இவர்களை தங்கள் சொந்த காரியங்களுக்காக உபயோகப்படுத்தக் கூடாது, காப்பி வாங்குவதற்கும் படுக்கையை எடுத்து வைப்பதற்கும் எப்போதும் இவர்களை உபயோகப்படுத்தக்கூடாது. அதே நேரத்தில் ஒரு அதிகாரியோ அல்லது அமைச்சரோ வெளியிடங்களுக்குப் போகும்போது அவர்களுக்கு வேண்டிய ஒத்தாசைகளை செய்யக்கூடாது என்பது என் விருப்பமல்ல, அல்லது அதிகாரியோ அல்லது அமைச்சரோதான் தாங்களே இந்த வேலை செய்ய வேண்டும் என்று நான் சொல்ல வரவில்லை. மற்ற ராஜ்யங்களைப் பார்த்தால், வேறு வேலைகளை எங்களைக்கொண்டு செய்யச் சொல்லக் கூடாது என்று கிளர்ச்சி நடந்து கொண்டிருக்கிறது. ஆபீஸில் ஒரு காப்பி வாங்கிக்கொடுப்பதில் பெரிய தவறு ஒன்றுமில்லை, இதில் தவறு ஒன்றுமில்லை, ஆபீஸில் வேலை செய்யக்கூடிய ஒரு கிளார்க்-க்கு ஒரு காப்பி வாங்கி கொடுப்பதில் எந்தவிதமான குற்றமும் இல்லை, அதற்கு மாறாக அவர்கள் திறமையாக வேலை செய்வதற்கு செய்யக்கூடிய உதவியே தவிர அதை ஒரு குற்றேவலாகவோ அல்லது அடிமைத் தொழிலாகவோ அல்லது கேவலமாகவோ எடுத்துக்கொள்ளக்கூடாது. ஆகவே மற்ற ராஜ்யங்களில் இவர்கள் நடத்தும் போராட்டத்தை நம்மால் ஆதரிக்கமுடியவில்லை. ஆபீஸ்களில் அவசியமான காரியங்களை செய்து கொடுக்க வேண்டியதுதான், அதல்லாமல் வீடுகளில் பியூன்களை கொண்டு வீட்டு வேலைகளை செய்விப்பதோ அல்லது தன் சொந்த வேலைகளை செய்யவேண்டுமென்று சொல்லும்போதுதான் இந்த மனகசப்பு எல்லாம் ஏற்படுகிறது. அதல்லாமல் அமைச்சர்களாகட்டும், அல்லது அதிகாரிகளாகட்டும், ஆபீஸில் சாதாரண உத்யோகஸ்தர்களாகட்டும், அவர்கள் திறமையாக வேலை செய்யவேண்டுமென்றால் அவர்களுக்கு கடைநிலை ஊழியர்கள் தேவை என்பது மட்டுமல்ல, அதனால் அவர்களுடைய வேலை துரிதமாகவும், திறமையாகவும் நடைபெறும் என்பதை சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஆகவே

23 rd August 1960] [Sri M. Kalyanasundaram]

சம்பள கமிஷன் சிபாரிசுகளில் சிக்கனம் ஏற்படுத்துவதற்காக பியூன்களை குறைக்கவேண்டும் என்று சொல்லியிருப்பது அவ்வளவு சரியல்ல, அது மட்டுமல்ல, அதிகாரிகள் வீடுகளில் தனியாக பியூன்களை வைத்துக்கொள்ளவேண்டாம், அதற்காக 30 ரூபாய் அதிகமாக வாங்கிக்கொள்ளலாம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதனுல் என்னவாகும் என்ருல் சம்பளத்தையும் வாங்கிக்கொண்டு, ஆபீஸில் இருக்கக்கூடிய ஒரு பியூனை வைத்துக் கொள்ளக்கூடிய நிலை ஏற்படும். ஆகவே இந்த சிபாரிசு சரியல்ல, ஆகவே இதன் பேரில் அவசரப்பட்டு முடிவு எடுக்கக்கூடாது, இதைப்பற்றி நன்ருக ஆலோசனை செய்து பார்த்து அதன் பேரில் முடிவு எடுக்கவேண்டும். ஆங்கிலத்தில் சொல்லுவார்கள், 'Penny wise and pound foolish' என்று. அந்த முறையில் பியூன்களை மட்டும் குறைத்துவிடுவதால் எந்தவிதமான பிரயோசனமும் ஏற்பட்டு விடப்போவதில்லை. ஆகவே இந்த சிபாரிசை நன்ருக ஆராய்ந்து பார்த்து முடிவுக்கு வரவேண்டும், இதில் அவசரப்பட்டு முடிவுக்கு வரக் கூடாது என்றும் கேட்டுக்கொள்கிறேன். இன்னும் இந்த சம்பளத்தைப் பற்றிய சிபார்சுகளில் இலாகாவிற்கு இலாகா வித்தியாசம் இருக்கின்றது. செக்ரட்டேரியட்டுக்கும், இன்னும் சென்னை நகரத்திலேயே இருக்கக்கூடிய இதர காரியாலயங்களில் வேலை செய்யக்கூடியவர்களுக்குமிடையே சம்பளத்தில் வித்தியாசம் இருக்கிறது. இதனுல் என்ன எண்ணம் ஏற்படுகிறதென்ருல், செக்ரட்டேரியட்டில் வேலை செய்வதென்பது தனி அந்தஸ்துடையதென்றும், அங்கு போக வேண்டுமென்றும் இதர வெளி இலாகாக்களில் இருப்பவர்களுக்கும், இதர இலாகா அதிகாரிகளுக்கும் ஒரு எண்ணம் ஏற்படுகிறது. செக்ரட்டேரியட்டில் மற்ற இலாகாக்களைவிட வேலை செய்வதில் தனித் திறமை வேண்டியிருக்கிறதா, செக்ரட்டேரியட்டின் முக்கியத்துவம் என்ன, என்பதைப் பற்றியெல்லாம் விரிவாகப் பரிசீலனை செய்யவேண்டியிருக்கிறது. சுதந்திரம் அடைந்த பிறகும், முன்பு இருந்த அதே நிர்வாக அமைப்பை வைத்துக்கொண்டிருக்கிருேம். எங்கே அதிகாரம் இருக்கவேண்டும், அதிகாரங்களை எங்கே பகிர்ந்து கொடுக்கவேண்டும் என்று பரிசீலனை செய்யாமல் இருக்கிருேம். அதற்கான பரிசீலனையைச் செய்யவேண்டுமென்பது எனது அபிப்பிராயம். இருக்கக்கூடிய "ஹெட்ஸ் ஆஃப் டிபார்ட்மெண்ட்ஸ்"-க்கு மேல்—தலைமை இலாகா அதிகாரிகளுக்கு மேல்—செக்ரட்டேரியட்டில் உட்கார்ந்துகொண்டு, நுட்பமான விஷயங்கள் தெரியாதவர்கள் தலைமை இலாகா அதிகாரிகள் அனுப்பக்கூடிய திட்டங்களைப் பற்றி "நோட்" போடுகிருர்கள். டைரக்டர் ஆஃப் மெடிக்கல் ஸர்வீஸ் ஒரு ப்ரொபோஸல் அனுப்பலாம். இங்கே இருக்கக்கூடிய காரியதரிசி, அந்த ப்ரொபோஸலிலுள்ள நுட்பங்களைத் தெரியாதவர், அதை மறுபடியும் பரிசீலனை செய்து அவர்கள் "நோட்" வைக்கவேண்டும். செக்ரட்டேரியட்டிலேயே "ஃபைனன்ஸ் டிபார்ட்மெண்ட்" என்பது ஒரு "ஸுபர் செக்ரட்டேரியட்". இதனுலெல்லாம் எவ்வளவு கால தாமதம் ஏற்படுகின்றது என்று பார்க்கவேண்டும். "ஹெட்ஸ் ஆஃப் டிபார்ட்மெண்ட்ஸ்" எல்லாம்

[Sri M. Kalyanasundaram] [23rd August 1960

பொறுப்பாளிகள்தான். அவர்களிடம் பொறுப்பு கொடுத்து வேலைகளைச் செய்யவேண்டுமே தவிர அவர்கள் செய்யவேண்டிய வேலைகளையும் இலாகாக்களில் செய்யவேண்டிய அவசியமில்லை. இலாகா தலைமை அதிகாரிகளிடம் திட்டத்தைக் கொடுத்து, நிறைவேற்றும் பொறுப்பை அவர்களிடம் கொடுத்து, மந்திரிகளும், மந்திரிகளுக்கு உதவி செய்யக்கூடிய காரியதரிசிகளும் அவர்கள் வேலைகளைச் சரியாகச் செய்கிறார்களா என்று பரிசிலனை செய்ய வேண்டும். இதனால் பெருமளவுக்கு காலதாமதம் குறைக்கப் படலாம், துரிதமாக வேலைகள் செய்யப்படலாம். கிராமத்திலிருந்து சென்னை செக்ரட்டேரியட் வரையில் இருக்கக்கூடிய ஏணியைப் பார்த்தால் பரம பத படம் மாதிரி இருக்கிறது. பரம பத படத்தில் இருக்கக்கூடிய பாம்பின் வாயில் விழுந்தால் அது கடைசிக்குப் போய்விடும். அதேபோல ஒரு "ஃபைல்"-ஐ க்ளோஸ் செய்து "எல்.டிஸ்." போட்டுவிட்டால் பாம்பு வாயில் விழுந்ததுபோல் கீழே போய்விடும். விவசாயியோ அல்லது சம்பந்தப்பட்டவரோ முயற்சியெடுத்து, மறுபடியும் எழுதி அனுப்பினால் உண்டு. இல்லையென்றால் "ஃபைல்" க்ளோஸ் ஆகிவிட்டது என்று போட்டாகிவிடும். அந்தப் பேப்பரிலுள்ள பிரச்சினை என்ன என்று பார்ப்பதில்லை. ஒரு விவசாயியை பாதிக்கக் கூடியதாக இருக்கலாம். ஒரு குடும்பத்தையே அழிக்கக்கூடிய பிரச்சினையாக இருக்கலாம். ஒரு தொழிலையே பாதிக்கக்கூடியதாக இருக்கலாம். அல்லது ஒரு கிராமம் பூராவிற்கும் சம்பந்தப்பட்ட பிரச்சினையாக இருக்கலாம். ஒரு டெக்னிக்கல் காரணத்தை காண்பித்து—ஒன்றுமில்லையென்றால் ஸ்டாம்ப் ஒட்டவில்லையென்ற காரணத்தைக் காட்டி—இப்போதுதான் எதற்கும் ஸ்டாம்ப் ஒட்டவேண்டுமென்று ஒரு ஏற்பாடு செய்து வைத்திருக்கிறார்களே—அடிப் படிக்குப் போய்விடும். அங்கே "எல்.டிஸ்." போட்டு கிளோஸ் செய்துவிடுவார்கள். "எல்.டிஸ்." என்றால் வேறு வேலையில்லை. பேப்பர் டிஸ்போஸ் ஆகிவிட்டது என்று அர்த்தம். மனுக்கொடுத்தவனுக்கு என்ன நடந்தது என்பதே தெரியாமல் அவன் சர்க்காரை சபித்துக் கொண்டிருப்பான். "ஃபைல்"-ஐக் கணக்கு செய்யவேண்டுமென்றால்—அந்த அடிப்படையில் சர்க்காரில் வேலை செய்யக் கூடியவர்கள் வேலை செய்யவேண்டுமென்று சொன்னால், நாம் முன்னேறுவதற்கான வழிவகைகளைக் காணமுடியாது. இதையெல்லாம் மாற்றுவதற்கு முயற்சி செய்யவேண்டும். அதைப் போலவே அநாவசியமான கேள்விகள் கேட்டு செக்ரட்டேரியட்டிலிருந்து இலாக்கா தலைமை காரியாலயங்களுக்கும், அங்கிருந்து தாலுக்கா காரியாலயங்களுக்கும், இப்படியே கிராம லெவல் வரையில் சென்று, திரும்பவும் அதே முறையில் செக்ரட்டேரியட் வரக்கூடிய பல காகிதங்களைப் பார்க்கிறேன். இதையெல்லாம் குறைக்கவேண்டும். அது இருக்கட்டும். அரசாங்கத்திலே எவ்வளவோ இலாகாக்களை அமைத்திருக்கிறார்கள். காரியாலயங்களில் வேலை செய்யக்கூடிய ஊழியர்கள் திரும்பத் திரும்பச் செய்யக்கூடிய தவறுகளை நிவர்த்திக்கவும், புதிய முறைகளைக் கற்றுக்கொடுக்கவும் யாருக்காவது உற்சாகம் இருக்கிறதா?

23 rd August 1960] [Sri M. Kalyanasundaram]

ஐ.ஏ.எஸ். போன்ற பட்டங்களைப் பெற்று எப்படி சம்பளம் வாங்குவது, அமைச்சரிடம் எப்படியாவது நல்ல பெயர் எடுக்க வேண்டும் என்ற முறையில் உயர்தர அதிகாரிகளும், இலாக்கா தலைமை அதிகாரிகளும், ஜில்லா அதிகாரிகளும், மற்ற அதிகாரிகளும் வேலை செய்கிறார்களே தவிர, புதிய முறையில் ஆர்கனைஸேஷனை அமைக்கவேண்டும், புதிய முறைகளைக் கையாள வேண்டும் என்று எந்த அதிகாரிக்காவது, எந்த டிபார்ட்மெண்ட் செக்ரட்டெரிக்காவது உற்சாகம் இருக்கிறதா என்றால், மற்ற என்.ஜீ.ஓ.-க்களைப் போல் அவர்கள் "எங்களுக்கு 1-30 மணியிலிருந்து 3-30 மணிவரையில் ஓய்வு கொடுக்கவேண்டும், நாங்களெல்லாம் பழைய ஐ.ஸி.எஸ். அதிகாரிகளைப்போல் இல்லையா?" என்ற முறையில் அவர்களெல்லாம் ஓய்வு எடுக்கப் பாடுபடுகிறார்களே தவிர வேலை முறைகளைப்பற்றி கவனிப்பதில்லை. வேலை முறைகளை எப்படி வகுப்பது, எப்படி வேலை முறைகளை நல்ல முறையில் மாற்றி மற்றவர்களுக்கு எப்படி உதாரணமாக இருப்பது என்பதெல்லாம் அதிகாரிகளிடமிருந்து ஆரம்பமாகவேண்டும். அப்போதுதான் இலாகாக்களில் வேலை சுறுசுறுப்பாக நடக்கும். அநாவசியமாக காகிதங்கள் சுற்றுவதைக் குறைக்க முயற்சியெடுக்க வேண்டும். இலாகா ஒவ்வொன்றுக்கும் இவ்வளவு என்று மான்யங்கள் ஒதுக்கப்பட்டுவிட்டால் ஒவ்வொரு அம்சத்திற்கும் "ஃபைனான்ஸ் டிபார்ட்மெண்ட்"-க்கு வரவேண்டுமென்று சொல்ல வேண்டியதன் அவசியம் என்ன? தவறு செய்து விடுவார்கள் என்று சொன்னால், தவறு செய்வதற்கு சந்தர்ப்பம் கொடுங்கள். பிறகு தவறு ஏற்பட்டால் அவைகளைத் திருத்துவதற்கு முயற்சி செய்யுங்கள். அனுமதிக்கப்பட்ட தொகைக்கு மேல் செலவு செய்யக்கூடாது என்று உறுதியாகச் சொல்லிவிடுங்கள். அதை விட்டு நிதி இலாகா, செக்ரட்டேரியட்டிலேயே ஒரு "ஸூபர் செக்ரட்டேரியட்" மாதிரி இருப்பது சரியல்ல. செக்ரட்டேரியட் சம்பந்தப்பட்டமட்டில் இன்றைக்குப் பார்த்தால் "டபிள் கண்ட்ரோல்" இருக்கிறது. "சீப் செக்ரெட்டேரியட்" ஆகிய "பப்ளிக் டிபார்ட்மெண்ட்" ஒரு கன்ட்ரோல், "பைனான்ஸ் டிபார்ட்மெண்ட்" ஒரு கண்ட்ரோல். மற்ற இலாகாக்களுக்கு தங்களுடைய நியாயமான குறைகளைச் சொல்லுவதற்குக்கூட இடமில்லாமல் போய்விடுகிறது. நம்முடைய அமைச்சர்களுக்கும் வேலை அதிகம். சுற்றுப்பிரயாணம் அதிகமாகச் செய்யவேண்டியிருக்கிறது. அவரவர்களுடைய இலாகாவின் குறைகளைக் கவனித்து, அவர்களுடைய இலாகாவில் இருக்கக்கூடிய சிப்பந்திகளின் நிலைமை என்ன என்பதைக் கவனித்து, அவர்களுடைய குறைகளைப் போக்குவதற்கு நடவடிக்கை எடுத்து, முயற்சியெடுத்து இந்த ரிப்போர்ட்டில் தக்க முடிவிற்கு வருவதற்கு முயற்சியெடுத்திருக்கிறார்களா என்றால் நிதி அமைச்சரைத் தவிர மற்றவர்கள் முயற்சியெடுத்திருப்பதாகத் தெரியவில்லை. அவர்கள் அவர்களுடைய சிப்பந்திகளின் பிரச்சினைகளைப் புரிந்துகொள்ளாமலிருந்திருக்கலாம். நிதி அமைச்சர் கல்வி அமைச்சராகவும் இருப்பதால் கல்வி இலாகாவை கவனித்திருக்கிறார் என்று ஒரு குறையாகச் சொல்லவில்லை. இன்றையதினம் நம்முடைய பட்

ஜெட்டை எடுத்துக்கொண்டால் கல்வி இலாகாவிற்கு ஒரு கோடி ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். அந்த இலாகாவிலிருந்து அதிக மான டிமாண்ட் வந்திருக்கிறது. இதுவே காலம் தாழ்த்தப்பட்ட பிரச்சினை. நிதி அமைச்சர் தன்னுடைய இலாகாவிற்குச் செய்து கொண்டு விட்டார் என்று சொல்லவில்லை. முக்கியமான பிரச்சினை யாக இருந்ததில் கவனம் செலுத்தி ஆசிரியர்களுக்குச் செய்தி ருப்பதால் அவர்களிடமிருந்து பாராட்டு வரும், அவர் களுடைய பாராட்டைப் பெறுவதற்காகச் செய்திருக்கிறார் என்று அர்த்தமல்ல. மற்ற இலாகாக்களில் இருக்கக்கூடிய "எஜுகேடெட் கிளாஸ்"-ஐ நிதி இலாகாவில் கவனித்து விட்டார்கள் என்று நினைக்கிறேன். ஜூனியர் என்ஜினீயர்களை யெல்லாம் கவனித்திருக்கிறார்கள். பப்ளிக் வொர்க்ஸ், லோகல் அட்மினிஸ்ட்ரேஷன், பப்ளிக் ஹெல்த் டிபார்ட்மெண்டுகளில் இருக்கக்கூடிய. . . . . . . . . .

**THE HON. SRI C. SUBRAMANIAM:** டாக்டர்களுக்கு நிறையக் கொடுத்திருக்கிறதே.

**SRI M. KALYANASUNDARAM:** பட்டம் படிப்பு பெறுமல் சாதாரண படிப்பு பெற்று, கஷ்டப்பட்டு உழைக்கக் கூடியவர்கள், அவர்களுடைய உழைப்பினுல்தான் டாக்டர்கள் கூட வேலை செய்ய முடிகிறது. அப்படிப்பட்ட உழைப்பினர்களின் நிலை என்ன? ஏற்கனவே எப்படி இருந்ததோ அப்படியேதான் இருந்து கொண்டிருக்கிறது.

அடுத்தபடியாக, "கண்டின்ஜன்ஸி" என்று ஒன்று இருக் கிறது. நகரசுத்தி என்பது கண்டின்ஜென்ஸி வேலையா? கண்டின்ஜென்ஸி என்றுல் பணம் இருந்தால் செய்யலாம், இல்லாது போனுல் செய்யவேண்டியதில்லை என்று அர்த்தம். அறுபது நகரங்களின் சுகாதாரத்தை கண்டின்ஜென்ஸி பிரச்சினையாக வைத்திருக்கிறார்கள். வெள்ளைக்காரன் இருந்த போது அதை கண்டின்ஜென்ஸி என்று வைத்திருந்தான். அவனுக்கு, நகர சுகாதாரம் முக்கியமல்ல. அவனுக்கு கோர்ட், போலீஸ், ஜெயில் இவைகள்தான் முக்கியம். இன்றைய நிலையில் இதை கண்டின்ஜென்ஸியாக வைப்பது சரியாகுமா என்று சிந்தித்துப் பார்க்கவேண்டும்.

அதேபோல "வொர்க்-சார்ஜ்ட்" எஸ்டாப்ளிஷ்மெண்ட்." ரோடில் வேலை செய்யக்கூடியவர்கள், பெரிய பெரிய அணைக் கட்டுகளைக் கட்டக் கூடியவர்கள், இவர்களுடைய வேலையைப் பாராட்டுகிறோம். இவர்களுடைய உழைப்பைப் பாராட்டுகிறோம். இன்றையதினம் உழைப்புக்கு மதிப்புக் கொடுத்து இவர்களைக் கொண்டே அஸ்திவாரக் கல் நாட்டச் சொல்கிறோம். கடற் கரையில் சிலை வைக்கிறோம். அவர்களுடைய நிலை என்ன? பத்து ஆண்டுகள், இருபது ஆண்டுகள் வேலை செய்துவிட்டு, வேலை முடிந்தவுடன் அவர்களை நிறுத்திவிடுகிறார்கள். அவர்களைப் பற்றிய சிபாரிசுகள் என்ன இருக்கிறது? அதை இந்த ரிப்போர்ட் ஆமோதித்திருக்கிறது. அதற்கு சர்க்கார் அனுமதியும் கொடுத்து விட்டது. சம்பந்தப்பட்ட அமைச்சர்கள் தங்களுடைய இலாகா

23rd August 1960] [Sri M. Kalyanasundaram]

அதிகாரிகளைக் கலந்துகொண்டு என்ன செய்தார்கள்? அது மறுபடியும் பரிசீலிக்கவேண்டிய விஷயம். 'ஓர்க்-சார்ஜ்ட்', 'கண்டின்ஜன்ஸி' என்ற வகையில் வைத்திருப்பவர்களை 'பர்மெனென்ட்' ஆக்கிவிடவேண்டும். அவர்களுக்கு உடனே இந்தச் சம்பளம் கொடுக்காவிட்டாலும், எல்லோருக்கும் திடீரென்று இந்த அளவு உயர்வு கொடுக்க முடியாவிட்டாலும், இன்றைக்கு இருப்பதைவிட படிப்படியாக உயர்த்தி, மூன்று வருஷங்களுக்குள்ளாக ரூபாய் 50—1—60 கிரேடுக்குக் கட்டாயம் கொண்டுவரப் படுவார்கள், என்ற வாக்குறுதி இருக்கிறதாகவும் தெரியவில்லை; ஆராய்ச்சி செய்ததாகவும் தெரியவில்லை. அது தலைவலி தரக்கூடிய பிரச்னை என்று கருதி, இன்றைக்கு அவர்கள் வாங்கிக்கொண்டிருக்கும் சம்பளத்தோடு ஐந்து ரூபாய் சேர்த்துக் கொடுத்துவிட்டு, அந்தப் பிரச்னையில் தலையிடவேண்டாமென்று முடிவு எடுத்திருக்கிறார்கள். ஆனால், அபிவிருத்தித் திட்டங்கள் நடைபெறுவது இவர்களைப் பொறுத்திருக்கிறது. அதிகம் செலவாகிறதே என்று நினைக்கலாம். நிதி மந்திரிக்கு நான் ஒரு ரகசியத்தைச் சொல்ல விரும்புகிறேன். இன்ன வேலைக்கு இத்தனை தொழிலாளர்கள், அவர்களுக்கு என்ன சம்பளம் கொடுக்கவேண்டும் என்ற நிர்ணயிப்பு இல்லாவிட்டால், அங்கங்கே இருக்கும் அதிகாரிகள், அவரவர்கள் இஷ்டப்படி, ரோடுசூபர்வைசர் என்ற வேலையிலுள்ள ஒருவருக்கு ரூபாய் 90 கொடுப்பார்கள், அதே வேலை செய்யும் இன்னொருவருக்கு ரூபாய் 45 கொடுப்பார்கள். ரோடு சூபர்வைசருக்கு ரூபாய் 45 ஒரு இடத்திலும், ரூபாய் 90 இன்னொரு இடத்திலும் ஏன் இருக்க வேண்டும்? இதை 'ப்ரொவின்ஷியலைஸ்' செய்து ரெகுலர் கிரேட் ஆக்கியிருந்தால் குறைபாடு இருக்காது. மொத்தத்தில் பார்த்தால், காலக்கிரமத்தில் அனுகூலம் ஏற்படும். 'ஓர்க் சார்ஜ்ட்' என்றால் இவ்வளவு ஆள்தான் வைக்க வேண்டுமென்ற நிர்ணயம் இருப்பதில்லை. ரொம்ப துரிதமாக வேலை நடக்கவேண்டுமென்றால் 200 ஆட்கள் வைக்கவேண்டிய இடத்தில் 300 ஆட்கள் வைக்க வேண்டியிருக்கும். அப்பொழுதுகூட, 200 ஆட்களையே வைத்துக் கொண்டு, அவர்களுக்கு ஏதோ சம்பளம் கொடுத்து உதவி செய்து வேலை வாங்கி, 300 பேர்கள் வேலை செய்ததாகச் சொல்லக்கூடிய துர்ப்பழக்கங்கள், கெட்ட பழக்கங்களுக்கு இடம் அளிக்கும். ஓர்க் சார்ஜ்டு எஸ்டாப்ளிஷ்மெண்டையெல்லாம் எந்த அளவுக்கு ரெகுலர் எஸ்டாப்ளிஷ்மென்டில் கொண்டுவருகிறோமோ, அந்த அளவுக்கு நல்லது. அதைச் செய்வார்களானால், ஒதுக்கிய பணத்தை எப்படியாவது செலவழிக்கவேண்டுமென்று மார்ச் மாதக் கடைசியில் அவசர அவசரமாகச் செலவு செய்து கணக்கு எழுதும் நிலைமை ஏற்படாது. தூரதிருஷ்டியோடு பார்த்தால், இதையெல்லாம் பரிசீலித்து அவர்களை ரெகுலர் எஸ்டாபிளிஷ்மெண்டிலே கொண்டுவந்தால் அது அந்த இலாகாவுக்கும் நன்மை, நாட்டுக்கும் நன்மை. ஆகையால் அந்தக் கண்ணோட்டத்தோடு ஓர்க்-சார்ஜ்டு எஸ்டாப்ளிஷ்மென்ட், கண்டின்ஜன்ட் எஸ்டாப்ளிஷ்மெண்ட் ஆகிய பிரிவுகளைப் பொறுத்து அரசாங்கம் கவனம் செலுத்த வேண்டுமென்று நான் கேட்டுக்கொள்ளுகிறேன்.

இதுபோன்று சம வேலைக்குச் சம சம்பளம் இருக்கவேண்டும் என்னும் கோட்பாடெல்லாம் நல்லது தான். அதை வியாக்கியானம் பண்ணுவதில் பல கருத்து வித்தியாசங்கள் வரலாம். ஆனால், ஒவ்வொரு இலாகாவிலும் ஒரே வேலை செய்யக்கூடியவர்களுக்கு ஒரே மாதிரி சம்பள விகிதம் இருக்கவேண்டும். சம்பள உயர்வுக்கு சம சந்தர்ப்பமும் ஏற்படவேண்டும். செக்ரடேரியட்டில் வேலை செய்யக்கூடியவர்களுக்குத் துரிதமான சம்பள உயர்வு பெறுவதற்குள்ள வாய்ப்புக்கள் இருக்கின்றன என்று ஜில்லாக்களில் இருக்கக்கூடியவர்கள் சொல்கிறார்கள். இங்கே அப்பர் டிவிஷன் க்ளார்க்குக்கும் லோயர் டிவிஷன் க்ளார்க்குக்கும் இருக்கும் ப்ரொபோர்ஷனைப் பார்த்தால் அப்பர் டிவிஷன் க்ளார்க்குகள் அதிகம்; லோயர் டிவிஷன் க்ளார்க்குகள் குறைவு. ஆனால், ஜில்லாக்களில், தாலுகா ஆபிசிலோ, கலெக்டர் ஆபிசிலோ பார்த்தால், அங்கே அப்பர் டிவிஷன் கிளார்க்குகள் ரொம்பக் குறைவு. லோயர் டிவிஷன் க்ளார்க்குகள் தான் பெரும்பாலானவர்கள் இருக்கிறார்கள். ஜில்லாவிலே வேலை செய்யக்கூடிய ஊழியர் ஒவ்வொருவருடைய மனதிலேயும் அதிருப்தி இருப்பதற்கு இது ஒரு முக்கியமான காரணம். தங்களுக்குப் பத்து ஸ்தானங்களாவது செக்ரட்டேரியட்டில் ஒதுக்கும்படி அவர்கள் கோருகிறார்கள். அது எவ்வளவு தூரம் சாத்தியம் என்பதை என்னால் புரிந்துகொள்ள முடியவில்லை. இதில் 'ஸீனியாரிடி' பிரச்னைகள் எல்லாம் வரும், சிக்கல் ஏற்படும் என்று நான் நினைக்கிறேன். முன் ஒரு தடவை அமைச்சர் அவர்கள், 'மத்திய சர்க்காருக்கு ஊழியர்களைப் புதிதாக நியமனம் செய்யும் போதெல்லாம் ராஜ்ய சர்க்கார் ஊழியர்களையும் ஒரு அளவுக்கு நியமித்துக்கொள்ளுங்கள்' என்று சொன்னார்கள். அது நிராகரிக்கப்பட்டது என்று நினைக்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இல்லை.

SRI M. KALYANASUNDARAM : ஆனால், ஒப்புக்கொள்ளவில்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM : The matter is under examination.

SRI M. KALYANASUNDARAM : அது பரிசீலனை செய்யப்பட்டு, மத்திய சர்க்கார் ஊழியர்கள் ஒப்புக்கொள்ளக்கூடிய முறையில் அது ஏற்றுக்கொள்ளப்படுமானால் நான் அதை வரவேற்கிறேன். ஆனால், இது ரொம்ப சிக்கலான பிரச்னை. ஏற்கனவே இருப்பவர்களின் ஸீனியாரிடி என்ன ஆகும்? இவர்கள் செய்த சர்வீசுக்குப் பலன் கிடைக்குமா என்பதை யோசனை செய்யவேண்டும். அதே போன்று ஜில்லாவில் இருப்பவர்களை ஒரு அளவுக்கு பதவி உயர்வு கொடுத்து செக்ரடேரியட்டுக்குக் கொண்டுவந்தால், இங்கே இருப்பவர்கள் தங்களுடைய ஸீனியாரிடி போய் விட்டது என்று சொல்லக்கூடும். வருகிறவர்களை இங்கு 'லோயஸ்ட் ஸீனியாரிடி'-யில் வைக்கவேண்டுமென்று இங்கு இருக்கக்கூடியவர்கள் நிர்ப்பந்தம்

23rd August 1960] [Sri M. Kalyanasundaram]

செய்யக்கூடும்; தங்களுக்கு 'ப்ரொமோஷனுக்கு' சந்தர்ப்பம் போய்விட்டதாகச் சொல்லக்கூடும். இது ரொம்ப சிக்கலான பிரச்னை. ஏன் இந்தக் கோரிக்கை வருகிறது என்று யோசிக்க வேண்டும். ஜில்லாக்களிலே இருக்கும் காரியாலயங்களிலே போதுமான அளவு அப்பர் டிவிஷன் க்ளார்க்கு ஸ்தானங்கள் ஒதுக்கப்பட்டிருப்பதால், இந்தக் கோரிக்கை வராது. ஆகையால், ஒருவர் பத்து, பதினைந்து வருஷங்கள் வேலை செய்த பிறகு அவர்கள் சம்பள உயர்வு பெறும் வகையில் மேற்பதவிகள் அதிகமாக இருக்கவேண்டும். அது பரவலாக இருக்கவேண்டும் குறிப்பிட்ட இலாகாக் காரியாலயங்களில் உத்தியோக உயர்வுக்கான சந்தர்ப்பம் அதிகமாக இருந்து, மற்ற இலாகாக் காரியாலயங்களில் அத்தகைய சந்தர்ப்பம் குறைவாக இருந்தால், அது மன எரிச்சல் தரக்கூடியதாக இருக்கும். ஆகையால், உயர்தரப் பதவிகள் அதிகமாகவும் பரவலாகவும் இருக்கும் முறையில் ஆராய்ந்து முடிவு எடுக்கவேண்டிய அவசியம் இருக்கிறது, என்பதை நான் சுட்டிக்காட்ட விரும்புகிறேன்.

அந்தப் பிரச்னைகளையெல்லாம் ஆராய்வதற்கு இந்த ரிபோர்ட் தயாரித்த குழுவினருக்கு நேரம் இல்லாதது காரணமாக இருக்க முடியாது. அவர்களுக்கு அந்தப் பொறுப்பு கொடுக்கப்படவில்லையாதலால், அதைச் செய்யவில்லை என்று நான் நினைக்கிறேன். அந்தப் பொறுப்பு இல்லாததால்தான் சில சந்தர்ப்பங்களில் அவர்கள் கோடிட்டுக் காட்டியிருக்கிறார்கள்.

நான் பூராவும் ஒவ்வொன்றையும் பரிசீலனை செய்வதாக இருந்தால், அவர்கள் செய்திருக்கும் ஒவ்வொரு சிபார்சுக்கும் மாற்று யோசனை கொடுக்கக் கூடியதாக ஆகிவிடும். அது அல்ல என்னுடைய நோக்கம். இந்தச் சிபார்சின் அடிப்படையில் ராஜ்ய சர்க்கார் ஊழியர்களிடத்தில் திருப்தியை ஏற்படுத்தி, அவர்கள் நம்முடைய ராஜ்யத்திற்குச் செய்ய வேண்டிய சிறந்த சேவையில் ஈடுபடுவதற்கு வேண்டிய உற்சாகத்தை உண்டாக்குவதில் நிதி அமைச்சர் அவர்கள் வெற்றியடைவார்களானால், அதில் நானும் சந்தோஷப்படுவேன். ஆனால், இப்பொழுது இருக்கிறபடி, மற்ற சுற்றுச்சார்பு சூழ்நிலை இப்படியே இருக்குமானால், இந்த ரிபோர்ட்டில் செய்திருக்கும் சிபார்சுகள் அமுலுக்கு வந்த பிறகும்கூட திருப்தி ஏற்பட்டு உற்சாகம் ஏற்படும் என்று நான் நம்புவதற்கு இடம் இல்லை என்பதை நான் அவர்களுக்குச் சுட்டிக்காட்டாமல் இருந்தால் அது ஏதோ முகஸ்துதிக்காகப் பேசுவதாக இருக்குமே தவிர, உண்மையிலேயே சந்தோஷப்படுவதற்கு ஒன்றும் இல்லை என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

மேலும், விலைவாசியைக் கட்டுப்படுத்துவதற்குள்ள நடவடிக்கை எடுத்துக்கொள்ளவேண்டும். நான் ஒரு வெட்டுப் பிரேரணையிலே ஒரு யோசனை கொடுத்திருக்கிறேன். அதைப் பற்றி 'டிமாண்ட்'-டை எடுத்துக்கொள்ளும் சமயத்தில் விரிவாகச் சொல்லலாம் என்று நினைக்கிறேன்.

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்பொழுதே சொல்லி விடுங்கள்.

SRI M. KALYANASUNDARAM : ஆகையால், இதிலேயே சொல்லிவிடுகிறேன். என்னுடைய வெட்டுப் பிரேரணை மிகவும் முக்கியமானது. அதாவது,

" To stress the necessity to appoint a High Power Committee to go into the question of recruitment, seniority, period of probation, confirmation and such other conditions of service of the Government employees."

இது ரொம்ப முக்கியமான பிரச்னை; ரொம்ப காலம் தாமதிக்கப் பட்ட பிரச்னை. அதிருப்திக்கும் மன எரிச்சலுக்கும் சந்தர்ப்பம் கொடுக்கக்கூடியது என்னவென்றால், மேல் அதிகாரிகளுடைய இஷ்டப்படி கீழுள்ளவர்கள் நடந்து கொள்ளாவிட்டால், அவர்களைப்பற்றி இரகசியக் குறிப்புகள் எழுதும் பிரச்னை இருக் கிறது. இதிலும் அரசாங்கம் கவனம் செலுத்த வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன். குறிப்பாக நான் சுட்டிக்காட்ட விரும்புவது 'கான்பிடன்ஷியல் ஃபைல்' வைக்கப்படுவதைப் பற்றி. கான்பிடென்ஷியல் ஃபைலும் ப்ரொபேஷனும் ஒன்றுக் கொன்று முரணானது. ப்ரொபேஷன் என்பது ஒரு அதிகாரிக்குப் பதவி உயர்வு கொடுக்கும் நேரத்தில், போதுமான திறமை இருக்கிறதா, பயிற்சி இருக்கிறதா என்பதைப் பார்ப்ப தற்காக அல்ல அது. அதற்குள்ள சந்தர்ப்பத்தைக் கொடுப்ப தற்காகத்தான் இருக்கிறது. கான்பிடென்ஷியல் ஃபைல் மூல மாக என்ன ஏற்படுகிறது? அதிகாரிகள், தங்களுக்கு இஷ்டப் படாதவர்கள் மீது, எதை வேண்டுமானாலும் எழுதி வைத்துவிட முடியும் என்ற நிலைமை இருக்கிறது. ஆனால், அமைச்சர் அவர்கள் சொல்லலாம்—அப்படி எழுதப்பட்டாலும், அந்தக் குற்றச்சாட்டுக்கள் என்ன, குறைபாடுகள் என்ன என்று அவர் களுக்குத் தெரிவித்து, அவர்களுடைய சமாதானத்தைப் பெற்று, அந்த இரண்டும் கான்பிடென்ஷியல் ஃபைலில் வைக்கப்படு கின்றன என்று சொல்லலாம். இதையெல்லாம் எதிர்த்து அப்பீல் செய்து, அதற்கு வேண்டிய பரிகாரம் தேடிக்கொள்வதற்கு சந்தர்ப்பம் கொடுத்துவிட்டால் மட்டும் போதாது. இம்மாதிரி விருப்பு வெறுப்புகளுக்கு இடம் அளிக்கக்கூடிய அதிகாரத்தைக் கொடுக்காமல் இருக்கவேண்டும். ஒருவருக்கு உரிய காலத்தில், முறைப்படி உத்தியோக உயர்வு கொடுக்காத அளவுக்கு 'கான்பி- டென்ஷியல் ஃபைலில் ஒரு அதிகாரி எழுதி விட்டால், மற்ற வர்கள் அந்த ஊழியருக்கு, மேல் அதிகாரியின் தயவு கிடையாது போலிருக்கிறது என்று எண்ணி, அவர் சொல்வதை யாரும் கேட்காதிருக்கக்கூடும். அவர் அப்பீல் செய்து பரிகாரம் பெறும் வரையில் அவருக்கு உற்சாகம் குறைகிறது. அம்மாதிரி பல இலாக்காக்களில் பல உதாரணங்களை நான் சொல்ல முடியும்.

சில இலாகாக்களில் செலக்ஷன் கமிட்டி வைத்து, அவர்கள் மூலம் உத்தியோக உயர்வுக்கான 'பானல்' தயாரிக்கப்படுகிறது. விருப்பு வெறுப்புகளுக்கு இடம் அளிக்கக்கூடிய முறையில் பல இலாகாக்களில் 'பானல்' தயாரிக்கப்படுகின்றது.

23rd August 1960] [Sri M. Kalyanasundaram]

இப்படி " பானல் " தயாரிப்பதில் விருப்பு வெறுப்பு ஏற்படுகிறது. அதற்கு இடம் கொடுக்க வேண்டாம் என்று தோன்றுகிறது. இப்படி பல இலாகாவில் நடைபெறுவதாகத் தெரியவருகிறது. அது நியாயம் இல்லை என்பது என்னுடைய அபிப்பிராயம். ஜூனியருக்கு ப்ரையாரிடி கொடுக்க வேண்டுமானால் அவருடைய திறமையைப் பொறுத்துக் கொடுக்கலாம். ஆனால் பேனல் என்று சொல்லி முப்பது அல்லது நாற்பது பேர்களை தயாரித்து அந்த லிஸ்டிலிருந்து உயர் பதவி கொடுப்பது என்பது அவ்வளவு நியாயமாகத் தோன்றவில்லை. சீனியாரிட்டியைப் பார்த்துத்தான் ப்ரோமோஷன்கள் எல்லாம் கொடுக்கவேண்டும். ஒரு வேளை முதலில் இருக்கக்கூடிய சீனியர்மோஸ்ட் உத்தியோகஸ்தருக்குக் கொடுக்க முடியவில்லையென்றால், அவருக்கு அடுத்தபடியாக இருக்கக்கூடியவருக்குக் கொடுக்கலாம். அப்படி இல்லாமல் முப்பது, நாற்பது பேர்களை வைத்துக்கொண்டு அதில் யாருக்காவது கொடுப்பது என்பது சரியல்ல. ஆகவே சீனியாரிட்டியைத்தான் முக்கியமாகக் கருதி ப்ரோமோஷன்கள் கொடுக்க வேண்டும். சீனியர்மோஸ்ட்டாக இருக்கக்கூடிய அந்த அதிகாரி அந்தப் பதவிக்கு வேண்டிய திறமையில்லாமல் இருந்தால் அவருக்கு அடுத்தபடியாக உள்ளவருக்குக் கொடுக்கலாம். திறமை என்று நிர்ணயிக்கும்போது சிலர் சிலருக்கு திறமைசாலியாக இருக்கலாம், சிலருக்கு திறமைசாலிகளாக இல்லாமல் இருக்கலாம். ஆகவே திறமைசாலி என்பதை எந்த அளவுகோலாலும் நிர்ணயிக்க முடியாது. அதற்கு என்று எந்த அளவுகோலும் கிடையாது. திறமைசாலிகள் என்று சொல்லிவிட்டால் யாரை வேண்டுமானாலும் பொறுக்கிக்கொள்ளலாம். தராதரத்தைப் பார்க்க வேண்டிய அவசியமே ஏற்படாது. திறமை இல்லை என்ற அடிப்படையில் யாரைவேண்டுமானாலும் தள்ளி விடலாம். ஆகவே அந்த முறை இருக்கவே கூடாது. ஆகவே செலெக்ஷன் முறை என்பது இருக்கவே கூடாது. ப்ரோபேஷன் என்ற முறையும் இருக்கவேண்டிய அவசியம் இல்லை. அது இருந்தால் தர்ம சங்கடமான நிலைமைக்குக்கொண்டு போய் விடும். அதனால் பல அதிகாரிகள் பாதிக்கப்படுவார்கள். இப்படிப்பட்ட மனப்பான்மை இருக்கும் அளவில் அந்த இலாகா சரிவர பணி புரியாது. ஒழுங்காக நடைபெறாது. அதிகாரிகளிடத்தில் எந்த விதமான நம்பிக்கையும் சிப்பந்திகளுக்கு ஏற்படாது. இப்படி பல இலாக்களில் நடைபெற்று வருகின்றன. அதற்கு இடம் கொடுத்தால் அந்த இலாகா நல்ல முறையில் பணியாற்றாது என்பதை மட்டும் தெரிவித்துக்கொள்ளுகிறேன். 11-10 a.m.

இதைப் போலவே பல இலாகாக்களில் லஞ்சம் தாண்டவமாடுகிறது. அதைப்பற்றி சில அங்கத்தினர்களும் குறிப்பிட்டார்கள். அதைப்பற்றி கனம் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லுவார் என்றே நினைக்கிறேன். நம்முடைய ராஜ்யத்தில் இருக்கக்கூடிய நிர்வாகம் எவ்வளவோ உயர்வாக இருந்தாலும் எவ்வளவோ திறம்பட இருந்தாலும்—அப்படியேதான் எல்லோரும் சொல்லிக் கொண்டு வருகிறார்கள், அதைப்பற்றி ஆட்சேபணை கிடையாது—

இதிலும் சில குறைபாடுகள் இருக்கத்தான் செய்கிறது என்பது என்னுடைய அபிப்பிராயம். அதை எடுத்துச் சொல்லாமல் என்னால் இருக்க முடியாது. நம்முடைய ராஜ்ய நிர்வாகத்தில் லஞ்சம் இல்லாமல் இல்லை. பல இடங்களில் இருக்கிறது. இதைப் பற்றியே சொல்லிக்கொண்டிருந்தால் என்.ஜி.ஓ.-க்களைப்பற்றியே பேசுகிறார்கள், என்.ஜி.ஓ.-க்கள் எல்லோரும் 'ஆனந்தவிகடன்', 'கல்கி' படித்துக்கொண்டிருக்கிறார்கள் என்றெல்லாம் சொல்லப் படுகிறது. ஆனால் 'ஜனசக்தி', 'நம் நாடு' போன்ற பத்திரிகைகளை படிக்கிறார்கள் என்று சொல்லவில்லை. அல்லது 'முரசொலி' இவைகளை படிக்கிறார்கள் என்று யாரும் சொல்ல வில்லை. 'ஆனந்தவிகடன்', 'கல்கி' தான் படிக்கிறார்கள் என்று சொல்லுகிறார்கள். ஆபிஸ் நேரத்தை வீணாக்குகிறார்கள் என்று எல்லாம் சொல்லுகிறார்கள். ஆறு மணி நேரத்தில் எல்லோரும் நியாயமாக வேலை செய்ய வேண்டும் என்பதுதான் என்னுடைய அபிப்பிராயம். நாங்கள் உரிமைக்குத்தான் போராடுவோம். கடமையைச் செய்யவில்லை என்றால் அதற்கு நாங்கள் போராட மாட்டோம். கடமையைச் செய்துவிட்டு அதற்குப் பிறகு எதை வேண்டுமானாலும் செய்யலாம். அதற்கு நாங்கள் உதவி செய்வோம். ஆனால் கடமையைச் செய்ய தவறிவிட்டு உரிமைக்கு போராட வேண்டும் என்று சொன்னால் அதை நாங்கள் ஏற்றுக் கொள்ளமாட்டோம். அதற்காக ஒவ்வொருவருக்கும் சுதந்தரம் இருக்கவேண்டும். நிர்வாகத்தில் வேலை செய்யக்கூடியவர்களுக்கு மன அதிருப்தி ஏற்பட்டு விட்டால் அந்த நிர்வாகத்திற்கு பெரிய ஆபத்து ஏற்பட்டுவிடும், என்பதில் சந்தேகம் இல்லை. அதை திருத்தவே முடியாது. லஞ்சம் வாங்குவதைப்பற்றி இங்கும் பலர் பேசுகிறார்கள், வெளியிலும் பலர் பேசுகிறார்கள். சில சமயங்களில் லஞ்சம் வாங்குவதைப்பற்றி சுட்டிக் காட்டினால் தக்க நடவடிக்கை எடுக்கப்படுகிறது. அவற்றைக்கண்டு நான் அரசாங்கத்தைப் பாராட்டுகிறேன். சில சந்தர்ப்பங்களில் நடவடிக்கை எடுக்கப் பட்டு வருவதைப்பற்றி சந்தேகமே இல்லை. சாதாரணமாக லஞ்சம் பெரும் அளவில் வாங்குகிறவர்கள் சாட்சி வைத்துக் கொண்டு வாங்குவது இல்லை. அதை நிரூபிக்க வேண்டும் என்றால் அது முடியாத காரியம். எவ்வளவோ திறமையாக அவர்கள் பெரிய அளவில் லஞ்சம் வாங்குகிறார்கள். அவர்கள் என்ன காரணத்திற்காக வாங்குகிறார்கள் என்பதை கவனிக்கவேண்டும். தாலுகா ஆபீஸ்களில் போனால் அங்கு மாமூலாக வாங்கப் படுகிறது. சில காரியங்களை சாதிக்கக்கொள்ள வேண்டுமானால் அதற்கு மாமூல் என்று வைத்திருக்கிறார்கள். அதைக் கொடுத்து விட்டால் காரியங்கள் சரிவர நடந்துவிடும். ரெவின்யூ டிபார்ட் மெண்டிலும், பி.டபிள்யு.டி., ஆர்.டி.ஒ டிபார்ட்மெண்ட்டிலும் மாமூலாக சில விஷயங்களுக்கு வாங்கப்பட்டு வருகிறது. சாதாரணமாக தக்காவிக் கடன் வாங்க வேண்டுமானால் வில்லேஜ் ஆபீசர் கையெழுத்துப்போட்டு தாலுகா ஆபீசிற்குச் சென்றால் அங்கே மாமூலாக ஐந்து ரூபாய் கொடுத்தால்தான் அந்தக் கடன் கொடுக்கப்படுகிறது. ஐந்து ரூபாய் கொடுத்தால்தான் நடக்கும்

23rd August 1960] [Sri M. Kalyanasundaram]

இல்லாவிட்டால் நடக்கவே நடக்காது. அந்த நிலைமையில் இருந்துகொண்டிருக்கிறது சில இலாகாக்களில். இப்படி மாமூலாக இருந்து கொண்டிருக்கிறது. இதை லஞ்சம் என்று சொல்வதா அல்லது வேறு எப்படிச் சொல்வது என்பது தான் தெரியவில்லை. இதற்கு லஞ்சம் என்று சொல்லக்கூடாது, மாமூல் என்றுதான் சொல்லலாம்.

இப்படிப்பட்ட மாமூல்களை வாங்கிக்கொடுப்பதற்கு சில டவுட்டுகள் இருக்கிறார்கள். அவர்களுக்குத் தெரியும் யாருக்கு எந்தெந்த காரியங்களுக்கு எவ்வளவு கொடுக்க வேண்டும் என்பது. அவர்களை வைத்துக்கொண்டு சிலர் வாங்கி வருகிறார்கள். இப்படிப்பட்ட ஒரு காரியம் நடந்து கொண்டிருக்கிறது. இதற்குக் காரணம் என்ன, குமாஸ்தாக்களை மட்டும் குறை சொல்வதில் பிரயோசனம் இல்லை. எல்லா இடத்திலும் இப்படிப்பட்ட ஒரு பழக்கம் இருந்து வருகிறது. இப்படி நடந்துகொண்டிருந்தால் தேசம் முன்னேற்றமடையாது. தேசத்திற்காக, தேச முன்னேற்றத்திற்காக எல்லோரும் வேலை செய்ய வேண்டும். இப்படி நடந்து வருவதற்கு பல உதாரணங்களைக் கொடுக்க முடியும். இதற்கு தக்க பரிகாரம் காண வேண்டியதாக இருக்கிறது. ஒரு கலெக்டர் போன பிறகு, அவர் ரிடயர் ஆன பிறகு ஆர்.டி.ஓ. வருகிறார். கார் பர்மிட் வாங்குவதற்கு அவர் கையெழுத்துப்போட வேண்டியதாக இருக்கிறது. அதை வைத்துக்கொண்டு கார் வாங்கி பலர் அதிகப்படியாக சம்பாதிக்கிறார்கள். ஆனால் அந்த அதிகாரி ரிடயர் ஆன பிறகு சொல்லுகிறார். தான் கையெழுத்துப் போட்டு கார் வாங்கி ஓட்டி இப்பொழுது முப்பது, நாற்பது கார் வைத்துக்கொண்டிருக்கிறார்கள், நாலும் நாலும் எட்டு என்று தெரியாதவர்கள் கார் பர்மிட் வாங்கி கார் ஓட்டி ஏராளமாக சம்பாதிக்கிறார்கள், ஆனால் கார் வாங்குவதற்கு கையெழுத்துப் போட்டவருக்கு தகுந்த பணம் இல்லாமல் இருக்கிறார்கள். இந்த நிலைமை சில அதிகாரிகளுக்கு இருக்கிறது. பி.ஏ. படித்துவிட்டு பட்டம் பெற்றுவிட்டு எவ்வளவோ நாட்கள் வேலை பார்த்துவிட்டு ரிடயரானாலும் அவருக்கு கார் வைத்து சம்பாதித்தவருக்கு இருக்கக்கூடிய அளவு சம்பாத்தியம் இல்லாமல் இருக்கிறார். தன்னுடைய கையெழுத்தை வைத்துக்கொண்டு லட்சக்கணக்காக சம்பாதிக்க முடிகிறது என்றும் தன்னால் சம்பாதிக்க முடியவில்லை என்றும் சிலர் நினைக்கிறார்கள். இந்த அளவில் பஸ் பர்மிட் வழங்குவதும் வியாபாரம் நடப்பதும் இருந்து கொண்டிருக்கிறது. பஸ் நடத்தினால்கூட ஆயிரம் ரூபாய் மாதம் சம்பாதிக்க முடிகிறது திறமை இல்லாவிட்டால்கூட, ஆனால் பி.ஏ. படித்து பட்டம் பெற்று சம்பாதித்தாலும் பெரிய அளவில் சம்பாதிக்க முடியவில்லை என்று சிலர் கருதுகிறார்கள். இப்படி எண்ணக்கூடிய மனப்பான்மை ஏற்படுகிறது. ஆகவே என்ன உற்பத்தியானாலும் அது பாழாகக்கூடிய நிலைமை ஏற்படுகிறது. ஆகவே நிர்வாகம் சரிவர நடைபெற வேண்டுமானால் நிர்வாக யந்தரங்கள் சரிவர நடைபெற

வேண்டும். நிர்வாகம் பழுதுபடாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். பழுதடைந்து விட்டால் நிர்வாகம் நல்ல முறையில் நடைபெருது. நல்ல நிர்வாகம் இல்லாவிட்டால் எந்த விதத்திலும் தொழில் நடத்த முடியாது. நியாயம் இல்லாமல் போய் விடும். அந்த சூழ்நிலையை உண்டாக்கக்கூடாது. அதை தவிர்க்க வேண்டும். நிர்வாகம் பழுதடையாத சூழ்நிலையை உண்டாக்க வேண்டும், அதற்கு வேண்டிய கவனம் செலுத்த வேண்டும் என்று கேட்டுக் கொண்டு என்னுடைய பேச்சை இத்துடன் முடித்துக்கொள்ளு கிறேன்.

MR. SPEAKER : அடுத்தபடியாக கனம் நிதி அமைச்சர் அவர்கள் பேசுவார்கள். அதற்கு முன் ஒரு வேண்டுகோள், கனம் அங்கத்தினர்களுக்கு. வெட்டுப் பிரேரேபணையை கொடுத் திருக்கிற எல்லா அங்கத்தினர்களும் பிரேரேபிக்கப் போகிருர்களா அல்லது எல்லோரும் அவரவர்களுடைய தலைவர்களைக் கேட்டுக் கொண்டு எல்லோரும் சேர்ந்து ஒரு முடிவுக்கு வந்து யாராவது ஒருவர் மட்டும் வெட்டுப் பிரேரேபணையை பிரேரேபிக்கப் போகிருர்களா என்பதை அறிய விரும்புகிறேன்.

SRI M. KALYANASUNDARAM : எல்லாத் தலைவர்களும் கூடிப் பேசி ஒரு முடிவிற்கு வந்து அதற்குப் பிறகு சொல்லுகிருேம்.

THE HON. SRI C. SUBRAMANIAM : கனம் சபாநாயகர் அவர்களே, இந்த இரண்டு நாட்களாக சம்பள கமிஷன் ரிபோர்ட்டைப்பற்றியும் அதையொட்டி வந்திருக்கிற இந்த நிதி கோரிக்கையைப்பற்றியும் விரிவாக விவாதம் நடந்திருக்கிறது. பட்ஜெட் காலத்திலும்கூட ஒவ்வொருவரும் பத்து அல்லது பதினைந்து நிமிஷங்கள்தான் பேசவேண்டும் என்று சொல்லுகிற காரணத்தால் பல விஷயங்களை எடுத்துச் சொல்ல வேண்டும் என்று நினைக்கும்போது அதற்கு அவகாசம் இல்லாமல் இருந்திருக்கிறது. ஆனுல் இந்த விவாதத்தில் எவ்வளவு வேண்டுமானுலும் பேசலாம் என்கிற ஒரு வசதியைக் கொடுத்த காரணத்தால் பல அங்கத்தினர்கள் இதைப்பற்றி விரிவாக விவாதிப்பதற்கு ஒரு வசதி ஏற்பட்டது. அதே மாதிரி பட்ஜெட் காலத்திலும் கூட எல்லோரும் பேசுவது என்பதற்கு பதிலாக இதைப்போன்று ஒரு சிலர் மட்டும் விரிவாகப் பேசலாம் அப்படிப் பேசினுல் நன்ருக இருக்கும் என்று தோன்றுகிறது. இதைப்பற்றி சொல்லும்போது என் மனதில் இருப்பதைச் சொன்னேனே தவிர இதைக் கட்டாய மாகச் சொல்லவில்லை, ஒரு முடிவாகச் சொல்லவில்லை. எல்லாக் கட்சி தலைவர்களும் இதைப்பற்றி ஆலோசனை செய்து முடிவுக்கு வந்து அதை சபாநாயகருக்குத் தெரியப்படுத்தினுல் அதைப்பற்றி அவர் சிந்தனை செய்ய வேண்டும் என்று நான் கேட்டுக்கொள்ளு கிறேன்.

இந்த விவாதத்தில் முக்கியமாக சம்பள கமிஷன் சிபாரிசைப் பற்றி பொதுவாக வரவேற்கக்கூடிய முறையில்தான் எல்லோரும் பேசினுர்கள். அதையொட்டி இந்தச் சம்பளக் கமிஷனில்

23rd August 1960] [Sri C. Subramaniam]

பணியாற்றிய தலைவர் அவர்களுக்கும் மற்ற அங்கத்தினர் களுக்கும் இந்தச் சபையின் சார்பாகவும், பொது மக்களின் சார்பாகவும், சர்க்கார் ஊழியர்களின் சார்பாகவும் என்னுடைய பாராட்டுதலைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். (கைதட்டி வர வேற்பு.) அதை திரு. கல்யாணசுந்தரம் அவர்களே கைதட்டி ஒப்புக்கொள்ளுகிறார்கள். ஏன் இதைச் சொல்கிறேன் என்றால் சம்பளக் கமிஷன் நியமித்தபோது அதன் செயர்மென்னாக சர்க்காரின் பிரதம காரியதரிசியாக இருந்து பணியாற்றி ஓய்வு பெற்ற ஒருவரை நியமித்தபோது அவர் சர்க்கார் ஊழியர்களின் நிலைமையை பாரபட்சமின்றி பரிசீலனை செய்து சிபார்சு செய்வாரா என்கிற சந்தேகம் எல்லோருக்கும் இருந்தது. எதிர்க் கட்சிக்கும்கூட இருந்தது. ஆனால் இன்றைக்கு அந்த நிலைமை இல்லாது நல்ல முறையில் பல விஷயங்களை ஆராய்ந்து பார்த்து நல்ல பல சிபார்சுகளைச் செய்திருக்கிறார்கள் என்பதை இந்த அறிக்கையைப் படிக்கும்போது நன்றாகத் தெரியும். சம்பளக் கமிஷன் தலைவரைத் தேர்ந்தெடுக்கும்போதே இப்படி எல்லா விஷயங்களையும் நன்றாகத் தெரிந்துகொண்டு, எல்லாச் சிக்கல் களையும் நுணுக்கமாகத் தெரிந்துகொண்டு இருப்பவரைத் தலைவ ராகப் போடவேண்டும் என்பதற்காக மட்டும் அல்ல—அவர் களுடைய சொந்த அனுபவத்தின் காரணமாக சர்க்கார் சிப்பந்தி களுடைய கஷ்டங்களை எல்லாம் ஓரளவு நன்றாக உணர்ந்து இருக்கக்கூடியவர் தலைவராகப் பணியாற்றவேண்டும் என்பதற் காகத்தான் ஸ்ரீ. ராமுண்ணி மேனன் அவர்களைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தோம். அவர் தலைமை வகித்தால்தான் நல்ல திருப்தி ஏற்படும் என்ற காரணத்தினால் அவரைத் தேர்ந்தெடுத்தோம். அவரைத் தலைவராகத் தேர்ந்தெடுத்ததுதான் சரி என்ற முறையில் —அதை நிரூபிப்பது போல நமக்கெல்லாம் திருப்தி அளிக்கக் கூடிய முறையில் அந்த அறிக்கை அமைந்திருப்பது மகிழ்ச்சி அளிக்கக்கூடிய விஷயம். அதில் பணியாற்றிய—நீதிபதியாக இருந்த—ஒருவர் அந்த அறிக்கை நல்ல முறையில் அமைவதற்கு மிகவும் உதவி செய்திருக்கிறார்கள். இதற்குமேல் பே கமிஷ னுடைய காரியதரிசியாகப் பணியாற்றிய ஒரு இளம் அதிகாரி இந்தப் பணியில் மிகத் திறமையாக வேலை செய்தார் என்று நான் உங்களுக்குச் சொல்லும்போது மற்றவர்களைக் குறைத்துச் சொல்ல வேண்டும் என்பதற்காக அல்ல. ஐ.ஏ.எஸ். ஆபீசர்கள் சரியாக வேலை செய்வதில்லை என்று சொல்லப்பட்டது. அவர்கள் மற்ற வர்களுக்கு வழிகாட்டியாக இருக்கவேண்டாமா என்று கேட்கப் பட்டது. சம்பளக் கமிஷனின் காரியதரிசியாகப் பணியாற்றிய ஐ.ஏ.எஸ். ஆபீசர் அறிக்கை தயாரிப்பதிலே, அதற்கு வேண்டிய புள்ளிவிவரங்களைச் சேகரிப்பதிலே, கமிஷன் முன்னாலே அவற்றை யெல்லாம் வைத்து நல்லதொரு முடிவுக்கு வரும்படி செய்வதிலே மிகவும் திறமையாக, ஊக்கமாகப் பணியாற்றியிருக்கிறார். அவருக்கு நம்முடைய சிறந்த பாராட்டுதலைத் தெரிவிக்கக் கடமைப்பட்டிருக்கிறேன். இந்தச் சமயத்தில் நான் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். திரு. கல்யாணசுந்தரம் அவர்கள்

[Sri C. Subramaniam] [23rd August 1960

இலாகாவிற்கு தலைமை வகிக்கிற ஐ.ஏ.எஸ். ஆபீசர்கள்—உயர்ந்த பதவியில் இருக்கக்கூடிய அதிகாரிகள்—வேலை செய்யாமல் இருக்கிறார்கள், மற்றவர்களுக்கு வழிகாட்டியாக இருக்கக் கூடியவர்கள் இப்படி இருப்பது சரியா என்பது போலப் பேசினார்கள். அவர்கள் எல்லோரும் நன்றாக வேலை செய்கிறார்கள் என்று பேசுவதற்கு நான் வரவில்லை. ஆனால் பெரும்பாலானவர்கள்—நூற்றுக்கு 90 பேர்களுக்கு மேல் நன்றாக வேலை செய்கிறார்கள் என்று என்னால் சொல்ல முடியும். இன்றைக்கு உயர்ந்த உத்தியோகத்தில் இருப்பவர்கள்தான் சாதாரணமாக இருப்பவர்களைவிட அதிகமாக வேலை செய்கிறார்கள் என்பதை வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். அதிலும் முக்கியமாக இன்றைக்குப் பெருமைப்பட வேண்டிய வகையில் இளைஞர்களாக இருக்கக்கூடிய அதிகாரிகள் உற்சாகத்துடனும், ஆர்வத்துடனும் பணியாற்றுகிறார்கள் என்பதைக் குறிப்பிடவிரும்புகிறேன். இதனால்தான் நம்முடைய நிர்வாக இயந்திரத்தைப் பற்றி கொஞ்சம் பெருமையும், நம்பிக்கையும் ஏற்படுகிறது. உயர்ந்த உத்தியோகத்தில் இருப்பவர்கள் மற்றவர்களுக்கு வழிகாட்டியாக இருக்கிறார்கள் என்றே சொல்ல விரும்புகிறேன். அதிக நேரம் காரியாலயங்களில் வேலை செய்கிறார்கள். வீட்டுக்குக் கொண்டுபோயும் வேலை செய்கிறார்கள். ஓய்வு நாட்களில் கூட வேலை செய்கிறார்கள். சுதந்திரம் வருவதற்கு முன்னால் இருந்த நிலைமையைப்பற்றியும், வந்த பிற்பாடுள்ள நிலைமையைப்பற்றியும் ஒருவர் சொன்னார்—தமாஷாகச் சொன்னதாக இருக்கலாம். ஆனால் அதிலும் ஓர் உண்மை இருக்கிறது. முன்பெல்லாம் கீழ்த்தர குமாஸ்தாவாக இருக்கக் கூடியவர்கள் குறித்த காலத்திற்கு முன்பே காரியாலயம் வர வேண்டும். குறித்த காலத்திற்குப் பின்பு நேரம் கழித்துத்தான் வீட்டுக்குத் திரும்ப முடியும். அதைவிடக்கொஞ்சம் உயர்ந்த நிலையில் இருப்பவர்கள் குறித்த காலத்திற்கு வந்து குறித்த காலத்தில் போய்விடுவார்கள். உயர்ந்த பதவியில் இருப்பவர்களோ குறித்த காலத்திற்கு அப்புறம் இரண்டுமணி ஒரு மணி தள்ளித்தான் காரியாலயம் வருவார். குறித்த காலத்திற்கு ஒருமணியோ, இரண்டு மணியோ முன்பாகவே போய்விடுவார்கள். ஆனால் இன்றைக்கு சுதந்திரம் வந்த பிற்பாடு இந்த நிலைமை மாறிவிட்டது. முன்பு இருந்த நிலைமை தலைகீழாகப் போய் விட்டது. கீழே இருப்பவர்கள் இப்போது வேலை செய்வதில்லை என்பதற்காக இதைச் சொல்லவரவில்லை.

பெரும் உத்தியோகத்தில் இருப்பவர்கள் இன்றையதினம் அதிக நேரம் வேலை செய்கிறார்கள் என்பதை அதுவும் குறிப்பாக திரு. கல்யாணசுந்தரத்திற்குச் சொல்ல விரும்புகிறேன்.

இன்றைக்கு நிர்வாக இயந்திரத்தின் உதவியைக்கொண்டுதான் நாம் எடுக்கிற முடிவுகளை எல்லாம் திறமையாகச் செயலாற்ற வேண்டியதாக இருக்கிறது. எல்லாக் காரியங்களையும் அவர்களை வைத்துக்கொண்டுதான் முடிக்கவேண்டியதாக இருக்கிறது. இதை உணர்ந்துதான் அரசியல் சட்டத்திலேயே அவர்களுக்குப் போது

23rd August 1960] [Sri C. Subramaniam]

மான பாதுகாப்பு அளிக்கப்பட்டிருக்கிறது. அதுவும் அந்தக் காலத்தில் அரசியல் சட்டத்தை உருவாக்கின சமயத்தில் உத்தியோக வர்க்கத்திற்கு எதிராகச் சில உணர்ச்சிகள் இருந்தன என்பது நமக்குத் தெரியும். அதிலும் சுதந்திர இயக்கத்தில் ஈடுபட்டிருந்தவர்களுக்கு உத்தியோக வர்க்கம் என்று சொன்னால் நாட்டுக்குத் துரோகம் விளைவித்தவர்கள் போல எண்ணம் இருந்து கொண்டிருந்த காலம். நமக்கு சுதந்திரம் வந்த பிற்பாடு இந்த நிர்வாக இயந்திரம் நல்ல முறையில் அமைந்தால்தான் நம் பொறுப்புகளை நல்ல முறையில் நிறைவேற்ற முடியும் என்பதை நன்றாக உணர்ந்து ஊழியம் செய்கின்றவர்களுக்குப் போதுமான பாதுகாப்பு அரசியல் சட்டத்திலேயே கொடுக்கவேண்டும் என்று கருதப்பட்டது. அதற்காகவே அரசியல் சட்டம் பார்ட் 14 வகுக்கப்பட்டது. அதில் அவர்களுக்குக் கொடுக்கப்பட்டிருக்கிற உரிமைகள், பாதுகாப்புகள் எல்லாவற்றையும் பார்க்கவேண்டும். நிர்வாக இயந்திரம் என் திறம்பட இயங்கவேண்டும், அதில் மற்றவர்கள் ஏன் தலையிடக் கூடாது, அந்த நிர்வாக இயந்திரம் எப்படி இருக்கவேண்டும் என்பதற்கு நான் ஒரு உதாரணம் சொல்வது உண்டு. அதை இங்கே சொன்னால் யாரும் தப்பாக அர்த்தம் பண்ணிக்கொள்ளமாட்டார்கள் என்று நினைக்கிறேன். ஒரு மோட்டார் கார் இருக்கிறது. அந்த மோட்டார் காருக்கு இயந்திரம் மிகவும் முக்கியம். அதை மூடி வைக்கவேண்டியது அவசியமாக இருக்கிறது. அந்த இயந்திரத்தின் இரகசியத்தைத் தெரிந்துகொள்ளாதவர்கள் வெளியே உட்கார்ந்து ஸ்டீரிங் பிடித்து ஓட்டுகிறானே—அதுதான் மோட்டார்காரை ஓட்டுவதாக நினைக்கிறார்கள். ஆனால் உண்மையாக மோட்டார் காரின் நுணுக்கமே இயந்திரத்தில்தான் இருக்கிறது. அது பழுதானால் கார் ஓடாது. மற்றபடி, கதவு, சீட்டு, பாடி ஏதாவது பழுதானால்கூட அதைச் சரிப்படுத்தி காரை ஓட்டலாம். (ஸ்ரீ ப. உ. ஷண்முகம்—டயர் பர்ஸ்டானால் ?) வைக்கப் புல்லை உள்ளே அடைத்துக்கூட காரை ஓட்டலாம். ஆனால் இயந்திரம் பழுதானால் பழுதானதுதான். கார் ஓடாது. அதற்காகவே அதை மூடி வைத்திருக்கவேண்டியது அவசியமாக இருக்கிறது. அது திறந்திருந்தால் என்ன என்றால் தூசி, குப்பைகள் அடைத்துக்கொள்ளும். என்ஜினைச்சிக்கோடு சேர்ந்து இயந்திரத்தைப் பழுதாக்கிவிடும். அதைப்போலவேதான் நமது அரசாங்க நிர்வாக இயந்திரமும் முக்கியமானது. பழுதடையாமல் அதை மூடி வைத்துப் பாதுகாக்கவேண்டியது நம்முடைய கடமையாகும். அந்தமுறையில் நிர்வாக இயந்திரத்திற்குப் பாதுகாப்பு அளித்திருக்கிறோம். நாம் செய்கின்ற எல்லாக் காரியங்களுக்கும் கருவியாக இருப்பது அந்த நிர்வாக இயந்திரம்தான். ஆனால் ஒன்று. அது கருவிதான் என்பதை நாம் மனதில் வைத்துக்கொள்ளவேண்டும். ஆகையால்நான் நிர்வாக இயந்திரத்திற்கே நாம் எல்லாப் பணத்தையும் செலவழித்துவிட்டால் அந்தக் கருவியை சரியான முறையில் பயன்படுத்திக்கொள்ளமாட்டோம். திட்டங்களைப் போடுகிறோம்.

அவற்றை நிறைவேற்றுகிற கருவி நிர்வாக இயந்திரம். எல்லாப் பணத்தையும் நிர்வாக இயந்திரத்திற்குச் செலவழித்து விட்டால் அதனுல் பயன் ஒன்றும் இல்லே.

(Sri K. Vinayakam in the Chair.)

ஆக, இன்று நாம் முடிவு செய்யும்போது, நிர்வாக இயந்திரத்திற்கு எந்தளவு செலவு செய்ய முடியும். அந்த இயந்திரத்தை வைத்துக் கொண்டு எதைச் சாதிக்க முற்படுகிறேமோ அதற்கு போதுமான வசதியிருக்கிறதா? என்று பார்க்க வேண்டியிருக்கிறது. எந்தளவிற்கு ஊதியம் கொடுக்கவேண்டுமென்று முடிவு செய்யும்போது, எந்தளவு பாதுகாப்பு கொடுக்கவேண்டுமென்று முடிவு செய்யும்போது, இந்த இயந்திரத்தை வைத்துக் கொண்டு நாம் என்னென்ன காரியங்கள் செய்யவேண்டியிருக்கிறது, அதற்கான வசதிகள் இருக்கின்றனவா என்றும் பார்த்து இதற்கு வேண்டிய பாதுகாப்பும் உத்தரவாதமும் கொடுக்க வேண்டியிருக்கிறது. இல்லாவிடில் வெறும் இயந்திரம்தான் இருக்கும். இவர்களுக்கு வேண்டுமானுல் மன திருப்தி ஏற்படலாம். ஆனுல் இவர்கள் ஆற்றக் கூடிய பணிகள் ஒன்றும் இல்லாமல் போய் விடும். ஆகவே, ஊழியர்களுக்கு எந்தளவு செலவிட முடியும், இந்த இயந்திரத்தை வைத்துக் கொண்டு நிறைவேற்ற வேண்டிய, நடத்தக் கூடிய பணிகளுக்கு எவ்வளவு பணம் வேண்டும் என்று இந்த இரண்டையும் வைத்துக்கொண்டுதான் நாம்முடிவு செய்ய வேண்டியிருக்கிறது, என்பதை நாம் மனதில் வைத்துக் கொண்டால் இங்கு சொல்லப்பட்ட குற்றங்குறைகள் என்ன காரணத்தால் ஏற்பட்டிருக்கிறது என்பது தெரியும். இந்த நுணுக்கங்கள் எல்லாம் தெரிந்திருப்பதால்தான் இந்த அறிக்கையில், பொது நோக்கோடு எங்கெங்கு உயர்த்த வேண்டியது அவசியம், எங்கெங்கு அதிகமாக உயர்த்தவேண்டுமென்று தெரிந்து அவர்கள் சிபார்சு செய்திருக்கிருர்கள். இந்த சிபார்சுகள் எல்லாம் குற்றங்குறை இல்லாத சிபார்சு என்று சொல்ல வரவில்லே. கல்யாணசுந்தரம் அவர்கள் சொன்னது போல், ஒவ்வொரு பகுதியை எடுத்துக் கொண்டாலும் இது ஏன் இப்படி இருக்கக் கூடாது, இது ஏன் இப்படி இருக்கக் கூடாது என்று மாற்று யோசனைகள் சொல்லலாம். ஒன்றில் ஒரு மாறுதல் செய்தால் இன்னெரு பக்கம் முரண்பாடு ஏற்படும். பொதுவாக இந்த அறிக்கை ஏற்றுக் கொள்ளக் கூடியதொன்று என்று இந்த சபை இதை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று சொல்கிறேனே தவிர கொஞ்சம் கூட குற்றம் இல்லே என்று சொல்லக் கூடிய அறிக்கை என்று எந்த அறிக்கையையும் சொல்ல முடியாது. இன்றைய நிலேயில் இந்த சிபார்சுகள் ஓரளவு திருப்தியளிக்கக் கூடியது என்றுதான் எல்லா அங்கத்தினர்களும் சொன்னுர்கள். அந்த அடிப்படையில் ஏற்பட்டிருக்கும் இந்த அறிக்கையின் அடிப்படையில் கொண்டு வரப்பட்டிருக்கும் இந்த நிதிக்கோரிக்கையை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று கேட்டுக் கொள்கிறேன். இன்னெரு கருத்து சொல்லப்பட்டது.

23rd August 1960] [Sri C. Subramaniam]

(Mr. Speaker in the Chair.)

சம்பள உயர்வு ஏற்படுவதற்கு அடிப்படைக் காரணமென்ன? ஏன் சம்பள உயர்வு வேண்டுமென்ற கோரிக்கை எழுந்தது என்று கேட்டு விலைவாசி உயர்வுதான் காரணமென்று குறிப்பிட்டார்கள். விலை உயர்வு பற்றி இதற்கு முன்பு ஒரு விவாதத்தில் குறிப்பிட்டிருக்கிறேன். ஆகவே அது பற்றி விரிவாக நான் கூற வேண்டிய அவசியமில்லை. என்னுடைய முடிவான கருத்து, இந்த விலைவாசி உயர்வைத் தடுப்பது மிகவும் அவசியம் என்பதாகும். நான் ஒரு முடிவு செய்து விட்டதால் அதற்கான எல்லாத் திட்டங்களையும் வகுத்து விட முடியும் என்று சொல்ல முடியாது. இது என் முடிவான கருத்து என்பதால் எந்த முறைகளை கையாள வேண்டுமென்று பார்த்து அதற்கு உடனடியாக திட்டம் போட்டுக் கொடுங்கள் என்று சொன்னால் அதில் பல சங்கடங்கள் இருக்கின்றன. ஆக, இது ஒரு சிக்கலான பிரச்னையாக இருப்பதால் உடனடியாக இதற்கு வழிகாண முடியாது. எந்த வழியில் செல்ல வேண்டும், எந்தளவு செல்லவேண்டும் என்று யோசித்து முடிவு செய்ய வேண்டியிருக்கிறது. விலை உயர்ந்து கொண்டே போகிறது, ஆகவே இதற்காக கிளர்ச்சிகள், வேலைநிறுத்தங்கள், இதற்காக வேலை செய்யாமல் தடங்கல்கள் இவைகளை செய்யக் கூடிய உரிமை சர்க்கார் உத்தியோகஸ்தர்களுக்கு இருக்கிறதா என்பதைப் பற்றித் தான் நாம் யோசித்துப் பார்க்க வேண்டும். அப்படிப்பட்ட உரிமைகளை நாம் அவர்களுக்கு கொடுப்பது சரியா என்று யோசித்துப் பார்க்கவேண்டும். அப்படி யோசித்துப் பார்க்கும் போது இதுபற்றி நான் முன்பு ஒரு தடவை கூறியிருக்கிறேன். அவர்களுக்குள்ள விசேஷ பொறுப்புகள் காரணமாக, அவர்களுக்கு அரசியல் சட்டத்தில் ஏற்பட்டிருக்கக் கூடிய பாதுகாப்பு காரணமாக, அவர்களைப் பொறுத்த வரையில் சட்டசபைக்கும் பார்லிமெண்டிற்கும் இருக்கக்கூடிய பொறுப்புகள் காரணமாக இதற்கு கிளர்ச்சிகள், வேலை நிறுத்தங்கள், வேலை அதிகம் செய்யக் கூடாது, குறைத்துச் செய்ய வேண்டுமென்ற முறையில் யாராவது அதற்கான இயக்கம் நடத்தவேண்டும், தொழில் இயக்க முறையில், யாராவது அதுதான் சரி என்று சொல்வார்களானால், அப்படி அவர்கள் செய்யும்போது நாங்கள் அவர்களுக்கு உதவியாக இருப்போம் என்று சொன்னால் நாட்டிற்கு அது நல்லதல்ல. மக்களுக்கும் அது நல்லதல்ல. இன்று நாம் மேலும் மேலும் பல துறைகளில் முன்னேற்றம் அடைய திட்டமிட்டுக் கொண்டிருக்கிறோம். அப்படி திட்டமிட்டு முன்னேற அது தடையாக இருக்கும். அவர்கள், அவர்களது கோரிக்கைகளை எடுத்து சொல்லக் கூடாது என்பதற்காகவல்ல. அவர்கள் குறைகளை எடுத்துச் சொல்லட்டும். அவைகளை, நியாயமான முறையில் எடுத்துச் சொல்ல முடியும். சட்டசபை இருக்கிறது, இங்கு அதுபற்றி விவாதிக்கிறோம். இன்று எங்களுக்கு சில குறைகள் இருக்கின்றன, ஆகவே எங்களுக்கு கிளர்ச்சி செய்வதற்கு, வேலை நிறுத்தம் செய்வதற்கு உரிமை வேண்டுமென்று

சொன்னுல் இரண்டிற்கும் முரண்பாடு இருக்கிறது. அப்படியானல் மற்றவர்களைப் போன்று இவர்களுக்கும் இந்த பாதுகாப்பு இருக்க வேண்டிய அவசியமில்லை. இஷ்டமிருந்தால் வைத்துக் கொள்ளலாம், இல்லாவிடில் வெளியே போகச் சொல்லலாம். இந்த மந்திரிக்கு பிடித்தவர் ஆகவே வைத்துக் கொள்ளலாம், இல்லாவிட்டால் போகச் சொல்லலாம் என்பதல்ல. தகுந்த பாதுகாப்புடன், வேலை உறுதியுடன் அவர்கள் இருக்க முடியும் என்ற நம்பிக்கையில் அவர்கள் தொடர்ந்து வேலை செய்யவேண்டுமென்ற முறையில் நாம் அமைப்பை ஏற்படுத்தியிருக்கிறோம். அரசியல் சட்டத்திலுள்ள பாதுகாப்பு மட்டுமல்ல, அவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கக் கூடிய முறையில் வேறு பல விதிகளும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. எனக்குத் தெளிவாக தெரியக் கூடியது, நம் நாட்டின் முன்னேற்றம் முழுவதும், திட்ட அடிப்படையிலுள்ள முன்னேற்றம் முழுவதும் எந்தளவிற்கு அத்தியாவசிய பொருள்களின் விலையைக் கட்டுப்படுத்த முடிகிறதோ அந்தளவிற்குத்தான் நம் முன்னேற்றம் செல்லும் என்பதில் சிறிதளவும் சந்தேகமில்லை. விலையை எப்படிக் கட்டுப் படுத்துவது என்பது ஒரு பக்கம் இருக்க, விலைகள் சிறுகச் சிறுக ஏறு நோக்கமாக இருக்கிறது என்பது ஒரு பக்கம் இருக்கிறது. திடீரென்று சர்க்கரை விலை இன்று, வீசை 1½ ரூபாயாக இருந்தது 2½ ரூபாயாக இருக்கிறது. அது ஒரு மாதத்திற்கு இருக்கும். வேண்டிய நடவடிக்கைகள் எடுக்கும்போது 1½, 1¾ ரூபாய்க்கு வரும். இதற்கிடையில் அதை வாங்கிச் சாப்பிடுகிறவர்களிடமிருந்து எவ்வளவோ லட்சக் கணக்கான ரூபாய் கொள்ளை லாபம் அடிக்கிறார்கள் என்று பார்த்தால், அதை உண்மையில் கொள்ளை லாபம் என்றுதான் சொல்லவேண்டும். அதேபோல் துணி விலை திடீரென்று ஏறும். நூல் விலையும் அப்படித்தான். திடீரென்று விலை ஏறிவிடுகிறது. பிற்பாடு நடவடிக்கைகள் எடுத்து அதன் காரணமாக விலைகள் கீழே வந்து சேரலாம். இதுபோல் திடீரென்று விலை ஏற்றம் ஏறுவதால் நியாயமான லாபம் அல்ல, கொள்ளை லாபம் அடிக்கக் கூடிய சூழ்நிலை ஏற்படுகிறது. ஆகவே, இது மாதிரி திடீர் விலையேற்றங்கள் ஏற்படாமல் இருக்க, அதன் மூலம் கொள்ளை லாபம் அடிக்காமல் இருக்க அத்தியாவசியப் பொருள்களின் விலையை கட்டுப்படுத்த வேண்டியது மிகவும் அவசியம் என்று வலியுறுத்திக் கூற விரும்புகிறேன். கல்யாண சுந்தரம் அவர்கள் சொன்னது போல் இதுபற்றி பரிசீலனை செய்து இதற்கான வழிகளை வகுக்க ஒரு கமிட்டி நியமிக்கப்பட்டிருக்கிறது. நேற்று பிரதம மந்திரி அவர்கள் இதுபற்றி குறிப்பிட்டிருக்கிறார்கள், இந்த விலை யேற்றத்தை கட்டுப்படுத்துவது மிக அவசியம் என்ற கருத்தை ஆக, இந்த விலைகள் கட்டுப்படுத்தப்படும் என்ற நம்பிக்கையிருக் கிறது. விலை அதிகமாக ஏறி அதனுல் மறுபடியும் ஒரு கிளர்ச்சி வரும் என்ற பயத்தை ஓரளவு ஒதுக்கி வைக்கலாம். நம்மையும் மீறி விலை உயர்வு ஏற்பட்டால் அதை எப்படி சமாளிக்கலாம்

23rd August 1960] [Sri C. Subramaniam]

என்பதுபற்றி அப்புறம் யோசித்துக்கொள்ளலாம். நமக்கு நாளை ஒரு நோய் வந்தால் என்னென்ன கஷ்டங்கள் படுவோம், கான்ஸர் வந்துவிட்டால் என்ன கஷ்டப்படுவோம் என்று ஒரு வியாதி வருவதற்கு முன்பே அதை நினைத்து கஷ்டப்படவேண்டியதில்லை, உடல் நலம் சரியாக இருக்கிறபோது. ஆக, வராததொன்றை நினைத்துக் கஷ்டப்படவேண்டியதில்லை. அதேபோன்று, இன்றுள்ள நிலைக்கு இது ஓரளவு திருப்தியளிக்கிறது என்பதை மனதில் வைத்துக்கொண்டு அந்தத் திருப்தியை அனுபவிக்க வேண்டுமென்ற முறையில் இங்கு இயங்க வேண்டுமே தவிர பின்னால் கஷ்டம் வரப்போகிறது, இப்பொழுது ஏன் திருப்திப்படவேண்டும் என்ற முறையில் பேசினால் அது உண்மையில் நாட்டிலே ஒரு பகுதியில் அமைதி நிலவுவது நமக்கு பிடிக்கவில்லை போலிருக்கிறது, அந்தத் திருப்தியைக் குலைக்க வேண்டுமென்ற நினைப்பு போலாகிவிடும் என்பதை கல்யாணசுந்தரம் அவர்களுக்கு எடுத்துச் சொல்ல விரும்புகிறேன். இன்னொரு கருத்து தெரிவிக்கப்பட்டது. மத்திய சர்க்கார் ஊழியர்களுக்கு அதிக சம்பளம், சென்னை சர்க்கார் ஊழியர்களுக்கு குறைவான சம்பளம் என்றிருக்கிறது என்று. இரண்டு பேர்களுக்கும் ஒருவிதமான சம்பளம் இருக்க வேண்டுமென்பதுபற்றி கருத்து வேற்றுமை இருப்பதற்கில்லை. கோவிந்தசாமி அவர்கள் ஒரு கருத்து சொன்னார்கள். சோஷியலிஸம் என்று சொல்கிறீர்களே இவை இரண்டையும் ஒன்று சேருங்கள் என்று. இரண்டு பேர்கள் சம்பளத்தையும் ஒன்றாக்கி விட்டால் அதனால் உடனே சோஷியலிஸம் வரும் என்று சொன்னால் அதை எளிதில் செய்து விடலாமே. இன்றைக்கு ஒரு பகுதியாக இருக்கக்கூடிய சர்க்கார் ஊழியர்களை மட்டும் வைத்துக்கொண்டு இவர்களுடைய சம்பளத் 11-30 a.m.
தை மட்டும் உயர்த்திவிட்டால் மட்டும் சோஷியலிஸம் ஏற்பட்டு விடமுடியாது. பொது மக்களுக்கு எவ்வளவு சௌகரியங்கள் ஏற்படுத்திக் கொடுக்க முடியும், அவர்களுடைய வாழ்க்கைத் தரத்தை எந்த அளவுக்கு உயர்த்திக் கொடுக்கமுடியும், எந்த அளவுக்கு இன்றைக்கு நாட்டிலிருக்கின்ற ஏற்றத் தாழ்வுகளை குறைக்க முடியும் என்பதை எல்லாம் அடிப்படையாக வைத்துக்கொண்டுதான் நாட்டில் சோஷியலிஸம் ஏற்படுத்துவதைப்பற்றி பார்க்கவேண்டும். ஒரு பகுதியினரை மட்டும் வைத்துக்கொண்டு நாடு முழுவதையும் ஒப்பிட்டு விட முடியாது. இன்றைக்கு இருக்கின்ற நிலையை எடுத்துக்கொண்டால், 60 ரூபாய் சம்பளம் வாங்கக்கூடிய நிலையிலிருந்து 3,000 ரூபாய் சம்பளம் வாங்கக்கூடிய நிலைமையும் இருந்து கொண்டிருக்கிறது. ஆகையினால் இன்றைய நிலைமையில் மத்திய சர்க்கார் ஊழியர்களுடைய சம்பளத்தை எடுத்துக்கொண்டு பார்த்து அதை போன்றே ராஜ்ய சர்க்கார் ஊழியர்களுக்கும் கொடுத்து விட்டால் எந்த விதமான வித்தியாசமும் இருக்காது. இதன் மூலம் சோஷியலிஸத்தை ஏற்படுத்திவிட முடியும் என்று சொல்லுவார்களேயானால் அல்லது அதுதான் சோஷியலிஸ அடிப்படை என்று சொல்லுவார்களேயானால் அதை நான் ஏற்றுக்கொள்ளத்

[Sri C. Subramaniam] [23rd August 1960

தயாராய் இல்லை என்பதை தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். ஆகவேதான் மத்திய சர்க்காருடைய சம்பள விகிதத்தை எல்லாம் பரிசீலனை செய்து பார்த்து அந்த அளவுக்கு நம்முடைய ராஜ்ய சர்க்கார் ஊழியர்களுக்கும் கொடுக்க முடியுமா என்பதையும் ஆலோசித்துப் பார்க்க வேண்டியிருக்கிறது. இவற்றையெல்லாம் ஆலோசித்துப் பார்த்து, இப்போது இருக்கின்ற நிலைமையில், கடை நிலை ஊழியர்களுக்கும், லோயர் டிவிஷன் கிளார்க்-களுக்கும் மத்திய அரசாங்கத்தினுடைய சம்பளத்தைப் போன்று கொடுக்கவேண்டும் என்று பார்த்ததில் வருடம் ஒன்றுக்கு 9 கோடி ரூபாய் அதிகமாக செலவு செய்ய வேண்டியிருக்கும் என்று தெரிய வந்தது. இது நம்முடைய இன்றைய நிலைமைக்கு முடியாத காரியம் என்பதை உணர்ந்து பார்த்த பின்னுல்தான் நமது நிலைக்கு தகுந்த முறையில் சம்பள உயர்வு கொடுக்கவேண்டும் என்ற முடிவுக்கு வந்திருக்கிறுர்கள். இந்த முடிவுதான் எப்போதும் இருக்கவேண்டும் என்பதல்ல, போகப்போக சீர்திருத்திக்கொண்டிருக்கலாம். கீழ் நிலையில் சம்பளம் வாங்கிக்கொண்டிருக்கிறவர்கள் மேலே போய்க் கொண்டிருப்பதற்கும் வழி செய்யவேண்டும். அந்த அடிப் படையில்தான் இதில் வழி செய்யப்பட்டிருக்கிறது. இன்றைக்கு இருக்கக்கூடிய நிலைமையில் பொதுமக்களுக்கு எவ்வளவு சௌகரியம் இருக்கிறது, தொழில் உற்பத்தி எவ்வளவு பெருகி யிருக்கின்றன, இதன் மூலமாக தேசிய வருமானம் எவ்வளவு உயர்ந்திருக்கிறது, அவ்விதம் கிடைக்கும் தேசிய வருமானத்தில் எல்லோருக்கும் பங்கு கிடைக்கவேண்டும், அதில் அரசாங்க ஊழியர்களுக்கு எவ்வளவு கிடைக்கவேண்டும் என்கின்ற அடிப் படையில் பரிசீலனை செய்து பார்த்துத்தான் சம்பள உயர்வை நிச்சயிக்க வேண்டியிருக்கிறது. அதல்லாமல் ஒரு பகுதியினரை மட்டும் எடுத்துவைத்துக்கொண்டு, அல்லது, மில் தொழிலாளர்களை எடுத்துக்கொண்டால் அவர்களை மட்டும் எடுத்துக்கொண்டு அல்லது ஓர் ஊரில் இருக்கின்ற விவசாய தொழிலாளர்களை மட்டும் எடுத்துக்கொண்டு பார்த்தால் தேசம் பூராவுக்குமான ஒரு ஊதிய அளவுக்கு முடிவு கட்ட முடியாது. ஆகவே சம்பள உயர்வு அல்லது ஊதிய உயர்வு என்கின்ற விஷயத்தை பரிசீலிக்கும் போது விலை உயர்வைப்பற்றி கவனிக்கவேண்டும், அதிலும் சம்பளம் வாங்கி காலத்தை நடத்திக்கொண்டிருக்கின்றவர்களின் வாழ்க்கை எவ்வளவு தூரம் பாதிக்கப்படுகிறது என்பதை நாம் பார்க்கின்றோம். ஆகவே ஊதிய உயர்வு என்று சொல்லும்போது தேசிய வருமானம் எந்த அளவுக்கு உயர்ந்திருக்கின்றது என்பதையும் பார்த்து, அதன் அடிப்படையில் சம்பள உயர்வையும் நிச்சயிப்பதுதான் நியாயமான முறை என்பது என்னுடைய கருத்து. ஆகவே பே கமிஷன் ரிப்போர்ட் பிரகாரம் அதன் சிபாரிசுகளை அமல் நடத்தும்போது ஊழியர்களுடைய மனதில் இந்தக் கருத்து தெரியவேண்டும். தெரியவில்லை என்றுல் நாம் அதை தெரிவிக்கவேண்டும். ஆகவே இப்போது கொடுக்கப் பட்டிருக்கும் இதே நிலையில் இன்னும் கொஞ்ச காலத்திற்கு,

23rd August 1960] [Sri C. Subramaniam]

மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில், அல்லது இன்னும் நான்கைந்து ஆண்டுகளுக்கு மறுபரிசீலனை செய்யாமல் இருக்கக் கூடிய முறையில நடத்திக்கொண்டிருக்க வேண்டுமே ஒழிய இன்னும் ஆறு மாதங்களுக்குள் அல்லது ஒரு வருடத்திற்குள் இதற்காக இன்னொரு தடவை இதற்காக மகாநாடுகள்போட்டு இன்னும் மறு பரிசிலனை செய்யவேண்டும் என்று சொல்லிக் கொண்டு இருப்போமேயானல் நாம் ஒன்றும் வேலை செய்ய முடியாது. இதைப்பற்றிதான் நான் முன்பு அவர்களுடைய கூட்டத்திலும் தெரிவித்தேன். அதே கருத்தைத்தான் இப்போதும் தெரிவிக்க விரும்புகிறேன். பே கமிஷனுடைய ரிப்போர்ட்தான் இனி எப்போதும் சாசுவதமாக இருக்கவேண்டும் என்று சொல்லவில்லை. ஐந்து வருடத்திற்கு ஒரு முறை, நாட்டில் ஏற்பட்டிருக்கின்ற நிலைமைகளை எல்லாம் எடுத்துப்பார்த்து, என்னவெல்லாம் முன்னேற்றங்கள் ஏற்பட்டிருக்கின்றன என்பதையெல்லாம் எடுத்துப்பார்த்து, தேசீய வருமானம் எவ்வளவு உயர்ந்திருக்கிறது என்பதையும் அடிப்படையாக வைத்துக்கொண்டு வேண்டுமானல் இப்போது இருக்கின்ற விலைவாசிகளையும் வைத்துக்கொண்டு பரிசிலனை செய்து பார்க்கவேண்டும், அதற்காக ஒரு கமிஷன் போட வேண்டுமானல் கமிஷன் நியமிக்கவோ அல்லது லெஜிஸ் லேச்சர் கமிட்டி போட வேண்டுமானல் அதை போடவோ நாம் நிர்ணயம் செய்யவேண்டும். ஆனல் இதே முறையில் பரிசீலனை செய்வதற்கு ஒரு காலத்தை நிர்ணயிக்கவேண்டும். இவ்விதம் ஒரு கால நிர்ணயம் செய்யாமல் இருப்போமானல், எந்த சமயத்திலும் இதைப்பற்றி பரிசிலனை செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் வந்து சேருகிறது. அவ்விதமில்லாமல் ஒரு காலத்தை நிர்ணயித்து அதற்கு தகுந்தாற்போல் பரிசீலனை செய்யவேண்டும் என்ற ஒரு நியதியை நாம் ஏற்படுத்திக்கொள்வோமானல் இதன் மூலம் எல்லோருக்கும் திருப்தி ஏற்படும் என்பதை நான் இந்த சபையில் மட்டுமல்ல, வெளியிலுள்ளவர்களுக்கும் வெளியிட விரும்புகிறேன். இதன் மூலம் இதை தொடர்ந்து பரிசீலனை செய்து மாற்றி அமைக்க வேண்டாம் என்று நான் சொல்ல முன் வரவில்லை. இப்போது கொடுப்பதை பயன்படுத்தி, அதன் மூலமாக நல்ல பணிகளை ஆற்றி அதன் மூலமாக பல திட்டங்களை நிறைவேற்றி அதன் மூலமாக நாட்டின் பொருளாதார பலம் உயரும்போது மேலும் ஊதியத்தை எந்த அளவுக்கு உயர்த்தவேண்டும், நம்முடைய வாழ்க்கைத்தரத்திற்குரிய வகையில் எந்த அளவில் உயர்த்த வேண்டும் என்பதைப்பற்றி பரிசீலனை செய்யவேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

அதற்கடுத்தபடியாக, கனம் அங்கத்தினர்களில் சிலர், அதில் எல்லா உத்யோகஸ்தர்களைப்பற்றியும் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆனல் கிராம உத்யோகஸ்தர்களைப்பற்றி ஒன்றும் சொல்லவில்லை என்கின்ற கருத்தை வலியுறுத்தி இது ஒரு பெரிய அநியாயம் என்று தெரிவித்தார்கள். இதில் ஒரு விஷயத்தை நாம் பார்ப்ப தற்கு கடமைப்பட்டிருக்கிரோம். இந்த கிராம உத்யோகஸ்தர்கள்

என்று நியமிக்கப்படுவது முன்பே இருந்து வரக்கூடிய ஒரு முறையாகும். இதனால் கிடைக்கும் ஊதியத்தைக்கொண்டு தங்கள் வாழ்க்கையை நடத்தவேண்டும் என்ற முறையில் இந்த கிராம உத்யோகஸ்தர்களை நியமிக்கவில்லை. கிராமத்தில் வசதியுள்ளவர்கள், யார் கிராமத்தில் செல்வாக்கு படைத்தவர்களாக இருக்கிறார்களோ அவர்கள, யார் மக்களுடைய நலன்களுக்கு தகுந்தவாறு நடந்து கொள்வார்களோ அவர்கள், இப்படிப்பார்த்து தான் அந்தக் காலத்தில் கிராம உத்தியோகஸ்தர்களாக நியமித்தார்கள். அதோடு அந்த பதவி தொடர்ந்து பரம்பரையாக இருந்து வரக்கூடிய நிலைமையும் இருந்து கொண்டிருக்கிறது. இந்த நிலைமையில் அவர்களுடைய பரம்பரை பாத்தியம் இருக்க வேண்டும். அவர்களுடைய சம்பளத்தையும் மற்ற ஊழியர்களைப் போல் சம்பள உயர்வும் வேண்டும் என்று சொன்னால் அதை நாம் ஏற்றுக்கொள்வதற்கில்லை, பரம்பரை பாத்தியமாக எல்லா இடங்களிலும் கிராம அதிகாரிகளை நியமிக்கிறோம், (குறுக்கீடு) ஒன்றிரண்டு ஜில்லாக்களில்தான் இந்த பரம்பரை பாத்தியத்தை இல்லையே தவிர மற்ற எல்லா இடங்களிலும் பரம்பரை பிரகாரம் தான் கொடுக்கப்பட்டு வருகிறது. இதே சமயத்தில் ஒரு முடிவுக்கு நாம் வரவேண்டும், அதாவது இனிமேல் பரம்பரை பாத்தியமாகத்தான் இது இருக்கவேண்டுமா அல்லது படிப்புக்குத் தகுந்தவாறு இவர்களை நியமிக்கவேண்டுமா என்பதைப் பற்றி ஒரு முடிவுக்கு வரவேண்டும். பரம்பரை பாத்தியமாக நியமிக்கப்பட்டால் அவர்கள் அந்த ஊரிலேயே இருக்கவேண்டும், அவர்கள் இதைமட்டும் வைத்துக்கொண்டு வாழ்க்கைத்தரத்தை நடத்திக்கொண்டிருப்பவர்களாக இருக்க மாட்டார்கள், அதல்லாமல் படிப்புக்கு தகுந்தவாறு தனியாக இவர்களை நியமிக்கலாம் என்றால் இவர்களை ஒரு பக்கத்திலிருந்து இன்னொரு பக்கத்திற்கு மாற்றலாம். ஆகவே இதைப்பற்றி அவர்களே ஆலோசனை செய்து ஒரு முடிவுக்கு வந்து அதை தெரிவிக்கலாம். (குறுக்கீடு) அவர்கள் எந்தக் கருத்தில் இருந்தாலும் அவர்களுடைய கருத்து என்ற முறையில் இங்கு பிரதிநிதிகள் கூறுவதைத்தான் நாம் எடுத்துக்கொள்ள முடியும் (குறுக்கீடு) வேண்டுமென்றால் இதற்காக ஒரு மகாநாடு போட்டு இதைப்பற்றி ஒரு முடிவு எடுக்கட்டும். அவர்கள் இப்போது இருப்பது போலவே பரம்பரையாகவே இருக்கவேண்டும் என்று அவர்கள் முடிவு செய்வார்களேயானால், அவர்களுடைய சம்பளம் மற்றவர்களுடைய சம்பளத்தோடு இணைக்கப்பட்டிருக்கவேண்டும் என்று சொல்வதற்கு நியாயமேயில்லை. இல்லை, வேறுள்ளவர்களையும் படிப்புக்குத் தகுந்தவாறு நியமிக்கலாம் என்று சொல்வார்களேயானால், அதற்கு தகுந்தபடி வேறு வழிமுறைகளை கையாளலாம். ஆகவே ஒன்றுக்கொன்று முரண்பட்ட வகையில் இல்லாதவாறு . . . . . .

**SRI C. N. ANNADURAI :** இந்த வேலைக்கு வருபவர்கள், திறமையுள்ளவர்களாய் இருக்கின்றார்களா, அல்லது படித்தவர்களாய் இருக்கின்றார்களா என்பது தனிப்பட்ட பிரச்னை. அவர்

23rd August 1960] [Sri C. N. Annadurai]

களுக்கு இப்போது தரப்படுகிற சம்பளம், வாழ்க்கைச் செலவுக்கு போதுமானதாய் இருக்கின்றதா என்பது வேறு பிரச்னை. ஊதியத்தை உயர்த்துவதற்கு இவர்கள் லாயக்குள்ளவர்களா என்பதும் வேறு பிரச்னை. ஆகவே இவைகளை எல்லாம் கலக்க வேண்டிய தேவையில்லை.

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது இதைத் தான் நான் முரண்பாடு என்று குறிப்பிட்டேன். அவர்களுடைய படிப்பைப் பார்க்காமல்—அவர்களுடைய தகுதியைப் பார்க்காமல்—ஏன் இவர்களை நியமித்திருக்கிறது? இந்த சம்பளத்தை வைத்துக்கொண்டு வாழ்க்கையை நடத்தவேண்டுமென்ற அடிப்படையில் அவர்களுக்கு இப்போது சம்பளம் கொடுக்கப்படவில்லை. அவர்கள் மற்ற தொழில் நடத்தலாம். அவர்களுக்கு மற்ற சொத்துக்கள் இருக்கலாம். அவர்கள் மற்ற வேலைகளைச் செய்து கொண்டே இதையும் கவனித்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களுக்குக் கொடுக்கக் கூடிய சம்பளம் ஒரு சன்மானம் கொடுப்பது போல இருக்கிறது. அவர்களும் இந்தச் சம்பளத்தைப் பெரியதாக மதித்துப் பெறவில்லை. சர்க்கார் சம்பளம் வருகிறது என்ற முறையில்தான் ஏற்பாடு செய்யப்பட்டது. அந்த முறை நமக்குப் பிடிக்கவில்லையென்றால் அதை மாற்றிக்கொள்ள ஆட்சேபணையில்லை. அந்த முறையையும் வைத்துக்கொண்டு, சம்பள நிர்ணயம் வேறு முறையில் இருக்க வேண்டும் என்று சொல்லும்போது—அவர்களுக்கு வாழ்க்கை நடத்த முடிகிறதா என்று பார்த்து சம்பள நிர்ணயம் இருக்க வேண்டும் என்று சொல்லும்போது—அப்போது தான் இரண்டுக்கும் உள்ள முரண்பாட்டை எடுத்துக் கூற வேண்டியிருக்கிறது.

SRI C. N. ANNADURAI : இப்போது கிராம அதிகாரிகள் நியமிக்கப்படுகின்ற முறையின் மூலம் திறமையான வேலைப்பாடு கிடைப்பதாக சர்க்கார் கருதுகிறார்களா?

THE HON. SRI C. SUBRAMANIAM : இப்போது செய்கின்ற அளவுக்குப் போதும் என்பது என் கருத்து. அவர்கள் பூராவும் இந்த வேலையையே செய்யவேண்டுமென்பது அவசியமில்லை. அவர்கள் வேறு வேலை செய்யலாம். வேறு காண்ட்ராக்ட் எடுக்கலாம். கடை வைத்து நடத்தலாம். சர்க்கார் ஊழியர்கள் முழு நேர ஊழியர்கள் என்ற முறையில் அவர்கள் காண்ட்ராக்ட் எடுக்க முடியாது, வேறு வேலை எதும் செய்ய முடியாது. ஆனால் இவர்களுக்கு இந்த மாதிரியான கட்டுப்பாடு எதும் கிடையாது—வேறு வேலை செய்யலாம், தொழில் நடத்தலாம். அதை அடிப்படையாக வைத்துத்தான் சம்பளம் நிர்ணயிக்கப்பட்டது. அதை அடிப்படையாக வைத்துத் தான் இப்போது சம்பளம் கொடுக்கப்படுகிறது. அதை விட்டுவிட்டு இவர்களை முழு நேர ஊழியர்களாகப் போட்டால், மூன்று அல்லது நான்கு கிராமங்களுக்குச் சேர்த்து ஒரு ஊழியரைப் போடலாம். ஒரு கிராமத்திற்கு ஒரு கிராம முன்சீப் என்று போடுவதற்கு பதிலாக மூன்று கிராமங்களுக்குச் சேர்ந்து ஒரு கிராம முன்சீப் போட்டால்,

இப்போது மூன்று பேர்களுக்குக் கொடுக்கக் கூடிய சம்பளத்தைச் சேர்த்து ஒருவருக்குக் கொடுக்க முடியும். வேலை பளு எவ்வளவு வைக்க முடியும் என்று பார்த்து, அந்த பளு வருவதற்கு எவ்வளவு கிராமங்கள் வைக்கலாம் என்று பார்த்துச் செய்ய முடியும். அப்படிப் பார்த்தால் ஒரு கிராமத்திற்கு ஒரு அதிகாரி வேண்டுமென்ற அவசியமில்லை. மூன்று, நான்கு கிராமங்களுக்குச் சேர்த்து ஒரு அதிகாரியைப் போட முடியும் . . . .

SRI K. SATTANATHA KARAYALAR : It is so in the Kanyakumari district.

THE HON. SRI C. SUBRAMANIAM : ஆம். கன்னியாகுமரி ஜில்லாவில் அப்படித்தான் இருக்கிறது. அங்கே பல கிராமங்களுக்கு ஒரு அதிகாரி போட்டிருக்கிறார்கள். அதனால் அதிக அளவுக்கு சம்பளம் கொடுக்கப்படுகிறது. ஒரு கிராமத்திற்கு ஒரு அதிகாரி வேண்டும் என்று சொல்லிவிட்டு, சம்பளம் மட்டும் அந்த அளவுக்குக் கொடுக்கவேண்டுமென்று சொன்னால் அதில் தான் முரண்பாடு இருக்கிறது.

SRI C. N. ANNADURAI : வாழ்க்கைச் செலவிற்கு வேறு துறையிலிருந்து வருவாய் பெறலாம், வேறு வேலை செய்யக் கூடாது என்ற நிர்ப்பந்தமில்லை என்று அமைச்சர் அவர்கள் சொன்னார்கள். ஆனால் அவர்களுக்குக் கொடுக்கப்படுகிற ஊதியத்தில் முன்னால் கொடுக்கப்பட்டு வந்ததை விட துரைத்தனத்தார் ரூ. 3 உயர்த்தினார்கள். அவர்களுடைய ஊதியத்தை உயர்த்த வேண்டிய நிலைமை இருக்கிறது என்பதைத் துரைத்தனம் ஒப்புக்கொண்டிருக்கிறது. அடிப்படைப் பிரச்சினை வேறு, அதனால் அதிகச் சம்பளம் தேவையில்லை, கொடுக்க வேண்டியதில்லை என்று அமைச்சரவர்கள் கூறுகிறார்கள் என்று ஐயப்படுகிறேன். இவர்கள் கொடுப்பது வாழ்க்கைச் செலவிற்குப் போதுமானதாக இல்லை என்ற அடிப்படைக் கருத்தை ஒத்துக் கொண்டு ரூ. 3 உயர்த்தியிருக்கிறார்கள். இதையே இன்னும் கொஞ்சம் உயர்த்தியிருந்தால் திருப்தியாக இருக்குமல்லவா ?

THE HON. SRI C. SUBRAMANIAM : முன்பு சொன்னதற்கு மேல் புதிதாக ஏதும் சொன்னதாகத் தெரியவில்லை நான் பதில் சொல்லுவதற்கு. அதையும் உத்தேசித்து இன்னும் சில பணிகளை இவர்கள் ஏற்றுக்கொண்டால் அதற்காக அதிகச் சம்பளம் கொடுக்கலாம் என்று சமீப காலத்தில், பத்திரிகைகளில் வந்து, அதை கனம் அங்கத்தினர்களும் கவனித்திருப்பார்கள். பஞ்சாயத்திலும், பஞ்சாயத்து யூனியன்களிலும் சில பணிகள் இருக்கின்றன. அதிலே கிராம உத்தியோகஸ்தர்கள் சில பணிகளை ஏற்று நடத்த முடியும். அவர்கள் அத்தகைய பஞ்சாயத்துப் பணிகளை, பஞ்சாயத்து யூனியன் பணிகளை ஏற்று நடத்தினால் ரூபாய் 15 முதற்கொண்டு கீழே ரூபாய் ஏழு வரையில் அதிகமாகச் சம்பளம் கொடுப்பதற்கு உத்திரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. இதன் மூலமாக, 75 பஞ்சாயத்து யூனியன்கள் அக்டோபர் 2-ம் தேதியன்று வரும்போது, அந்த வட்டார கிராம அதிகாரிகளுக்கு

23rd August 1960] [Sri C. Subramaniam]

கொஞ்சம் ஊதிய உயர்வு கொடுக்கப்படுகிறது. மற்ற பகுதிகளில் இந்த பஞ்சாயத்து யூனியன்கள் வரும்போது அவர்களுக்கும் கிடைக்கும். இதிலே ஏன் வரவில்லையென்றால், இதிலே பரிசீலித்த பணியாளர்களுக்கும்—சர்க்கார் பணியாளர்களுக்கும்—கிராம அதிகாரிகளுக்கும் முறையிலேயே அடிப்படையிலேயே வித்தியாசம் இருப்பதால் இரண்டையும் இணைக்கவில்லை. அதைத் தனியாக நிர்ணயித்துக்கொள்ள அவகாசம் இருக்கிறது என்ற முறையில் அவர்கள் இன்னும் அதிகமாகப் பொறுப்பேற்று வேலை செய்கிறோம் என்று சொல்லும்போது அதிகமாக ஊதியம் கிடைக்க வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. அதிகமாக ஊதியம் வேண்டுமென்று சொல்லுகிறவர்கள் அதனால் அதிகப்படியான வேலை செய்வதற்குத் தயாராக இருக்கவேண்டும் என்று சொல்ல விரும்புகிறேன்.

அடுத்தபடியாக ஒரு கருத்து தெரிவிக்கப்பட்டது. "சரி, ஊதிய உயர்வு கொடுத்திருக்கிறீர்கள், அதே நேரத்தில் அந்த அளவுக்கு அவர்கள் வேலை செய்யவேண்டியதை அதிகப்படுத்தியிருக்கிறீர்கள், இரண்டுக்கும் சரியாகப் போய்விட்டது" என்று சொன்னார்கள். இன்றைக்கு அரசாங்க ஊழியர்கள் முழு நேர ஊழியர்கள். அவர்கள் திறமைக்கு தகுந்தவாறு—சக்திக்குத் தகுந்தவாறு—வேலை செய்யக் கடமைப்பட்டிருக்கிறார்கள். ஐந்து மணி நேரம் அல்லது 5½ மணி நேரம் வேலை செய்துகொண்டிருந்தார்கள். இப்போது கொஞ்சம் அதிகமாக்கி, இன்னும் அரை மணி நேரம் அதிகமாக வேலை செய்யவேண்டும் என்று செய்திருக்கிறது. சம்பளம் கொடுப்பது போதுமா என்று பார்க்க வேண்டுமென்று சொல்லும்போது நாம் கொடுத்திருக்கக்கூடிய வேலை பளு சமாளிக்கக்கூடிய வேலை பளுவா என்று பார்க்க வேண்டியிருக்கிறது. அப்படிப் பார்க்கும்போது பூராவான வேலை பளு இல்லை என்று நான் சொல்லுவது மாத்திரமல்ல, இங்கே ஏதோ குற்றம் குறை சொல்லவேண்டுமென்று சொன்னாலும், சர்க்கார் ஊழியர்கள் இதை ஏற்றுக்கொண்டு பேசாமல் இருக்கிறார்களே என்று பொறுக்கவில்லையென்றாலும், சர்க்கார் ஊழியர்களைப் பொறுத்த வரையில் அவர்கள் இதை ஏற்றுக்கொண்டு பெரிய மனது வைத்து நல்ல முறையில் வேலை செய்து வருகிறார்கள். சர்க்கார் ஊழியர்கள் இதைப்பற்றி ஒன்றும் கிளர்ச்சி செய்யவில்லையே, இங்கேயாவது சொல்லி வைக்கலாமா என்று சிலர் சொல்லுகிறார்கள். ஆனால் இதுவரையில் சர்க்கார் ஊழியர்கள் ஒருவரும் குறை சொல்லவில்லை. இதை ஏற்றுக்கொண்டு நல்ல முறையில் வேலை பார்த்து வருகிறார்கள்.

அதன் பிறகு விடுமுறை நாட்கள் குறைந்து போய்விட்டது என்று சொன்னார்கள். இன்னும்கூடக் குறைக்கலாம் என்பது எனது கருத்து. அதற்காக இன்னும் குறைப்பதாக இல்லை—பேச்சுக்குச் சொல்கிறேன். விடுமுறை நாட்களை அதிகமாக்கிக் கொண்டு வருகிறோம் என்று நான் சொல்லவில்லை, முற்போக்கடைந்த நாடுகளில்கூட இவ்வளவு கிடையாது, அவ்வளவு அதிகமாக விடுமுறை நாட்கள் இருக்கின்றன என்று மற்றவர்கள்

சொல்லுகிறார்கள். முன்னேறிச் செல்லவேண்டும் என்று நாம் திட்டத்தைப் போட்டுக்கொண்டிருக்கும்போது, உழைப்பு அடிப்படையில்தான் முன்னேற்றம் ஏற்படுமே தவிர, குறைவாக உழைத்து, அதிக முன்னேற்றம் அடைவது என்றால் அது இயற்கைச் சட்டத்திற்கு முரணானது. எந்த அளவுக்கு அதிகமாக வேலை செய்யமுடியுமோ அந்த அளவுக்கு வேலை செய்யவேண்டுமென்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன். ஐந்து மணி நேர வேலையாக இருந்தாலும், ஆறு மணி நேர வேலையாக இருந்தாலும் வேலை நேரத்தில் திறமையாக நல்ல கவனத்துடன் வேலை செய்வது முக்கியம். ஐந்தரை மணியை ஆறு மணியாக உயர்த்தி ஐந்தரை மணி நேரத்தில் செய்யவேண்டிய வேலையை ஆறு மணி நேரத்தில் செய்யாமல் போனால் என்ன பிரயோசனம். அரை மணி ஜாஸ்தியாக ஆபீஸில் உட்கார்ந்திருப்பதால் நன்மை வந்துவிடாது. எந்த முறையில் பணியாற்றுகிறோம் என்று கவனிக்கவேண்டும். ஆபீஸில் பத்திரிகை படிப்பதைப்பற்றிக் குறிப்பிட்டார்கள். எல்லோரையும் சொல்லமுடியாது, ஒரு சிலர் அப்படி இருக்கலாம். நானும் சில சமயங்களில், முன்னாலேயே சொல்லிக்கொள்ளாமல், சர்க்கார் காரியாலயத்தைச் சுற்றிப் பார்ப்பது வழக்கம். இரண்டு அல்லது மூன்று மாதங்களுக்கு ஒரு முறை அம்மாதிரி பார்ப்பது வழக்கம். சில இடங்களில் நாவல்களை வைத்துக்கொண்டு, பத்திரிகைகளை வைத்துக்கொண்டு, நியூஸ்பேப்பர்களை வைத்துக்கொண்டு, மாத சஞ்சிகைகளை வைத்துக்கொண்டு படித்துக்கொண்டிருப்பதை நானே பார்த்திருக்கிறேன். அம்மாதிரியெல்லாம் செய்யக்கூடாது, ஆபீஸில் இருக்கும்போது வேலையைச் சரிவரச் செய்யவேண்டுமென்று அப்போது சொல்லிக்கொண்டு வருவது மாத்திரமல்லாமல் அதற்கான நடவடிக்கைகளையும் எடுத்துக் கொண்டிருக்கிறோம். ஆபீஸில் இருக்கும்போது "ஃபைல்"-ஐக் கவனித்து பிறகு எது வேண்டுமானாலும் செய்யுங்கள் என்று எடுத்துச் சொல்லிக்கொண்டு வந்திருக்கிறோம். இன்றைக்கு ஓரளவு அதிலே முன்னேற்றம் வந்திருக்கிறது. வேலையைச் சரிவரச் செய்யவேண்டும், கொடுத்திருக்கும் காலத்தில் எந்த அளவுக்கு அதிகமாகச் செய்யமுடியுமோ அந்த அளவுக்குச் செய்யவேண்டும் என்ற உணர்ச்சியும் சர்க்கார் ஊழியர்களிடத்தில் ஏற்பட்டிருப்பதைப் பார்த்து மகிழ்ச்சியடைகிறேன். பூராவும் தீர்ந்துவிட்டது என்று சொல்லமுடியாது. சில இடங்களில் இன்னும் இருக்கலாம். இருக்கக்கூடியதும் நீங்கவேண்டும். அந்தக் குறைபாடுகளைப் போக்க நடவடிக்கை எடுக்கவேண்டும். குறைகளை எடுத்துச் சொல்வதற்கும் தைரியம் இருக்கவேண்டும். குறையே இல்லையென்று சொல்லவில்லை. அங்கங்கே இருக்கக்கூடிய குறைகளை கவனித்துக்கொண்டு வருகிறோம். இந்தக் குறையும் சீக்கிரம் நீங்கும் என்று சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

இதிலே முக்கியமாக சென்னை சர்க்காரைப் பொறுத்தவரையில், அவர்கள் ஏற்றுக்கொண்டிருக்கும் இன்னொரு முக்கியமான கொள்கையின்படி, சம்பளம் கொடுப்பது ஒருபுறமிருக்க, பொது சௌகரியங்களை அதிகமாக ஏற்படுத்திக் கொடுக்கவேண்டும் என்ற அடிப்படையிலே பல திட்டங்களை அவர்கள்

நிறைவேற்றியிருக்கிறார்கள். முதன் முதலாக, இலவசப் படிப்பின் மூலமாக யாருக்கு அதிகமாக நிவாரணம் வேண்டியிருக்கிறதோ அவர்களுக்கு நிவாரணம் கிடைக்கிறது. ஒரு குடும்பத்தில் இரண்டு குழந்தைகள் இருந்தால், அவர்களுக்குப் படிப்பு கிடைக்கிறது என்ற அளவுக்கு நிவாரணம் ஏற்படுகிறது. குழந்தைகள் அதிகமாக, கட்டுப்பாடு இல்லாமல் ஏழு, எட்டு குழந்தைகள் இருக்கக்கூடியவர்களானால், அந்தக் குழந்தைகளுக்கு இலவசப் படிப்பு கிடைக்கக்கூடிய அளவுக்கு நிவாரணம் கிடைக்கிறது. சுகாதார வசதி செய்துகொடுப்பது நலல முறையில் கிடைக்கவில்லை என்று பலர் புகார் செய்துகொண்டிருக்கிறார்கள். அதைப்பற்றி அந்த இலாகா மந்திரி அவர்களுடைய கவனத்திற்கு நாங்கள் அடிக்கடி கொண்டுவருகிறோம். அதிலேயும் வைத்திய வசதி நல்ல முறையில் அவர்களுக்குக் கிடைப்பதற்காக முயற்சி செய்துகொண்டு வருகிறோம். இதிலே என்ன ஏற்படுகிறதென்றால், நியாயமான பேர்களுக்குச் சில சமயங்களில் வைத்திய வசதி கிடைக்காமல் போய்விடுகிறது. ஏனென்றால் இதிலே எப்படியாவது பணம் பண்ண முடியாதா என்று நினைத்து, உயர்ந்த மருந்துகளை வாங்கி வெளியிலே விற்கக்கூடிய முறையில் ஒரு சில தவறுகள் நடந்துவிடுகின்றன. இதனால் சில கட்டுப்பாடுகளை ஏற்படுத்தவேண்டியதாக இருக்கிறது. அந்தக் கட்டுப்பாட்டின் மூலமாக, நியாயமாக வசதி வேண்டியவர்களுக்கும்கூட, அது கிடைக்காமல் பல கஷ்டங்கள் ஏற்படுகின்றன. ஆகையால்தான், சர்க்கார் உத்தியோகத்தில் இருக்கக்கூடியவர்கள் இம்மாதிரி வசதிகள் வரும்போது அதை நியாயமான முறையில் பயன்படுத்திக் கொள்ளவேண்டும் என்ற முறையில் அவர்கள் முன் வந்தால், இதிலே இன்னும் சிறந்த வைத்திய வசதிக்கான ஏற்பாடுகளைச் செய்துகொடுக்க முடியும்.

SRI D. S. AUTHIMOOLAM : எழுநூறு ரூபாய்தான் வைத்திய வசதிக்காகப் போடப்பட்டிருக்கிறது.

THE HON. SRI C. SUBRAMANIAM : பட்ஜெட் பூராவையும் படித்திருக்கமாட்டார் கனம் அங்கத்தினர் என்று நினைக்கிறேன். ரூபாய் 700-ல் முடியாத காரியம்.

வீட்டு வசதியைப்பற்றிக் குறிப்பிட்டார்கள். அது ரொம்பவும் முக்கியம். வீட்டு வாடகை ஓரளவு கொடுத்திருந்தாலும்கூட, வீட்டு வாடகை அதிகமாகிவிட்டதைச் சரிக்கட்டுவதற்காக ஒரு அளவுக்குக் கொடுத்திருக்கிறதே தவிர, இதுவே பூரா வீட்டு வாடகைக்கும் சரியாய்விடும் என்ற அடிப்படையில் கொடுக்கவில்லை. சர்க்காருடைய பொறுப்பு, சர்க்கார் வேலையில் இருக்கக்கூடியவர்கள் எல்லோருக்கும் வீட்டு வசதி செய்து கொடுப்பதற்கு முயற்சி செய்யவேண்டும், அதற்கு அதிகமான முயற்சி செய்யவில்லை என்ற கருத்தைத் தெரிவித்தார்கள். நான் சில புள்ளி விவரங்களைக் கொடுக்க விரும்புகிறேன். இந்த வருஷ பட்ஜெட்டிலும் சொல்லியிருந்தேன். போலீஸ் அதிகாரிகளுக்கு வீடு கட்டிக் கொடுப்பதற்காக இந்த வருஷத்திலே மட்டும் 75 லட்ச ரூபாய் ஒதுக்கியிருக்கிறோம். வருஷாவருஷம் இதே வகையில்

பணம் ஒதுக்கி வருகிறோம். ஏற்கனவே பொதுமக்களுடைய வீட்டில் குடியிருந்த போலீஸ்காரர்களுக்குத் தனியாக வீடுகள் கட்டிக் கொடுக்கும்போது அந்த அளவுக்கு பொதுமக்களுடைய வீட்டு வசதி பெருக முடியும். அடுத்தபடியாக, ப்ரைமரி ஹெல்த் சென்டர்களில் வேலை செய்பவர்களுக்கு வீட்டு வசதிக்காக 15 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. பப்ளிக் ஒர்க்ஸ் ஒர்க்ஷாப், ஸ்டோர்ஸ் இவைகளில் பணிபுரியக்கூடியவர்களுக்கு வீட்டு வசதிக்காக ஐந்து லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. கவர்ன்மெண்ட் ஆப் இந்தியா ரென்டல் ஹௌஸிங் ஸ்கீம்படி ராஜ்ய சர்க்கார் ஊழியர்களுக்காக பத்து லட்ச ரூபாய் ஒதுக்கப் பட்டிருக்கிறது. கவர்ன்மெண்ட் பிரெஸ்ஸில் வேலை செய்யக்கூடிய வர்களுடைய வீட்டு வசதிக்காக எட்டு லட்ச ரூபாய் ஒதுக்கப் பட்டிருக்கிறது. ஆக மொத்தம், சர்க்காரே வீடு கட்டவேண்டு மென்ற அடிப்படையிலே ஒதுக்கப்பட்டிருக்கும் தொகை ஒரு கோடி 13 லட்ச ரூபாயாகும். அதற்குமேல், 'லோ இன்கம் க்ரூப் ஹௌஸிங் ஸ்கீம்' என்ற முறையில் கடன் கொடுத்து வீடு கட்டு வதற்காக 55 லட்ச ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. அதிலேயும் சர்க்காரிலே வேலை செய்கிறவர்களுக்கு வீட்டு வசதி ஏற்படுவதற்கு வாய்ப்பு ஏற்படுகிறது என்பதை நான் தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன்.

நான்கைந்து வருஷங்களுக்கு முன்பு எப்படியிருந்தாலும், சென்ற மூன்று, நான்கு வருஷங்களாக வீட்டு வசதி செய்து கொடுக்கவேண்டும் என்பதற்காக மேலும் மேலும் அதிகமாக நிதி ஒதுக்கி வீட்டு வசதியைச் செய்து கொடுத்து வருகிறோம். பூராவும் வீட்டு வசதிப் பிரச்னையை நல்ல முறையில் தீர்த்து வைத்திருக்கிறது என்று நான் சொல்லமுடியாது. ஆனால், தொடர்ந்து இந்தத் திட்டத்தை நிறைவேற்றுவதன் மூலமாக சர்க்கார் உத்தியோகத்தில் இருக்கக்கூடியவர்களுக்கு வீட்டு வசதிகள் செய்து கொடுப்பதற்கு நாம் திட்டமிட்டு வேலை செய்து வருகிறோம் என்பதைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். இதிலே ஒன்றும் செய்யவில்லை என்று யாரும் குறை கூறக்கூடாது என்ப தற்காகச் சொல்கிறேன். இன்னும் அதிகமாகச் செய்யவேண்டும் என்பதிலே சந்தேகம் இல்லை. வீட்டு வசதி இம்மாதிரி செய்து கொடுப்பதற்குத் திட்டமிட்டு, ஒரு கோடி முதல் ஒன்றரை கோடி ரூபாய் அளவுக்கு வருஷமொன்றுக்கு செலவிடுகிறோம். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தின்போது இதை இன்னும் எவ்வளவு உயர்த்த முடியும் என்று பரிசீலனை செய்து பார்த்து, அந்த அளவுக்கு உயர்த்தி, அதன்மூலமாக இன்னும் வசதியைப் பெருக்கு வதற்காக முயற்சி செய்யப்படும் என்ற கருத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

இன்னொரு விஷயத்தையும் கனம் அங்கத்தினர் திரு. கல்யாண சுந்தரம் அவர்கள் குறிப்பிட்டார்கள். இதிலே முக்கியமாக, சம்பள உயர்வு கொடுத்திருப்பதிலே ஆசிரியர்களுக்காக ஒரு நல்ல பங்கைப் பெற்றிருக்கிறார்கள் என்பதைப் பற்றிக் குறிப்பிட் டார்கள். அதிலும் ஏதாவது ஒன்று சொல்லி வைக்கவேண்டுமே

23rd August 1960] [Sri C. Subramaniam]

என்பதற்காக 'நிதி அமைச்சரே கல்வி அமைச்சராகவும் இருப்பதால், அவர் காரியத்தைப் பார்த்துக்கொண்டார்' என்ற முறையில் சொன்னார்கள்; மற்ற மந்திரிகள் அதைப்பற்றி ஏதாவது நினைத்துக்கொள்ளட்டுமே என்று சொன்னாரோ என்னவோ. அது ஒரு புறமிருக்கட்டும்.—அதையும் சொல்லி வைத்து, அதே சமயத்தில், உபாத்தியாயர்கள் ஏதோ நினைத்துக்கொள்ளக் கூடாதே என்பதற்காக, 'ரொம்ப நாளாகக் காத்திருந்த காரியம்; செய்ததைப்பற்றி நல்லது' என்று அவர்களைச் சமாதானப் படுத்துகிற மாதிரி ஒரு வார்த்தை சொல்லிவைத்தார்.

கனம் அங்கத்தினர் அண்ணாமலை அவர்கள், 'இது கொடுத்திருப்பது போதுமா? குமாஸ்தாக்களுக்கும் இவர்களுக்கும் ஒரே மாதிரி வைக்கலாமா? உபாத்தியாயர்கள் குமாஸ்தாக்களைவிட இரண்டு வருஷம் அதிகமாகப் படித்து வருகிறார்களே?' என்றார்கள்.

**Sri A. GOVINDASAMY**: செகண்டரி கிரேட் ஆசிரியர்கள் ....

**The Hon. Sri C. SUBRAMANIAM**: செகண்டரி கிரேட் ஆசிரியர்களைப் பற்றித்தான் சொல்லுகிறேன். எஸ்.எஸ்.எல்.சி. படித்து அதற்குமேல் இரண்டு வருஷப் பயிற்சி பெறுகிறார்கள்.

**Sri K. VINAYAGAM**: ஒரு வருஷம்தான்.

**The Hon. Sri C. SUBRAMANIAM**: பி.ஏ. படித்தவர்களுக்கு ஒரு வருஷப் பயிற்சி. ஆனால், செகண்டரி கிரேட் ஆசிரியர் பயிற்சிக்கு இரண்டு வருஷங்கள். இப்படி இரண்டு வருஷப் பயிற்சி பெற்றதற்குப் பிற்பாடு, அவர்களுக்கும் அதே சம்பளத்தைத்தானே கொடுக்கிறார்கள் என்று கருத்து தெரிவித்திருக்கிறார்கள். ஆனால், அதிகமாகக் கொடுத்துவிட்டேன் என்று ஒரு பக்கம் திரு. கல்யாணசுந்திரம் அவர்கள் குற்றம்சாட்டி மீதி பேரைத் தூண்டிவிடுகிறார்கள். திரு. அண்ணாமலை அவர்கள், 'இது போதாது, இன்னும் கொஞ்சம் அதிகமாகக் கேளுங்கள்' என்று உபாத்தியாயர்களைத் தூண்டிவிடுகிறார்கள். இம்மாதிரி முறையில் இயங்கினால் எந்தக் காரியத்தைத்தான் செய்யமுடியும்? எந்தக் காரியத்தைச் செய்து திருப்தி அடைய முடியும் என்று தெரியவில்லை. அவர் சொன்ன கருத்தை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆகையால், திரு. கல்யாணசுந்திரம் அவர்களுக்குச் சொல்லிக் கொள்கிறேன்.—நான் கொடுத்தது அதிகமாகக் கொடுக்கவில்லை; இன்னும் அதிகமாகக் கொடுக்க இடம் இருக்கிறது என்று தெரிவித்துக்கொள்கிறேன். நான் நிதி அமைச்சராக இருந்தாலும்கூட, அப்படி ஒன்றும் என்னுடைய இலாகாவுக்கு அதிகமாக, நியாயத்துக்கு மீறி, அளவுக்கு மீறிக் கொடுத்துவிடவில்லை என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன். மற்ற மந்திரிகள் எல்லாம் கவனிக்கவில்லை என்று சொல்லமுடியாது; ஒவ்வொருவரும் அவரவர் சம்பந்தப்பட்ட இலாகாவைப் பொறுத்து, ஒப்புக்கொண்டதன் பேரில்தான் இது அமுலுக்கு வந்திருக்கிறதே தவிர, அவர்களைக் கேட்காமல் செய்தது அல்ல. ஆகையால், இன்றைக்கு இருக்கும் நிலையில் இந்த அளவுதான் செய்யமுடியும் என்று ஒரு கமிஷன் போட்டு தீர்ப்பு

இருக்கிறது, குறையாக இருக்கிறது என்று நிதர்சனமாகச் சொன்ன பிற்பாடு, ஒவ்வொருவருக்கும் அதிலே இது குற்றமாக தெரிந்தாலும் சரி, அவர்கள் சொல்லக்கூடியதை ஒப்புக்கொள்ள வேண்டுமென்ற முறையிலே செய்வதற்கில்லை. ஒரு முடிவு செய்த தற்குப் பிற்பாடு, மேலும் மேலும் அதிகப்படுத்தவேண்டுமென்ற போட்டி ஏற்பட்டால், அது எந்த அளவுக்கு எங்கு போய் நிற்க மென்று சொல்லமுடியாது. கொடுத்திருக்கும் சிபார்சுகளை ஏற்றுக் கொள்ளவேண்டுமென்று முடிவு எடுத்திருக்கிறது. அதிலே மற்ற மந்திரிகள் எவரும் ஏமாந்துவிடவில்லை. மற்ற மந்திரிகள் இதிலே ஜாக்கிரதையாக இல்லாமல் சிரத்தைக் குறைவாக இருந்ததாக எந்த அங்கத்தினர் சொன்னாலும், அது அரசியலுக்காகச் சொல்ல லாமே தவிர, அது உண்மையல்ல என்று தெரிவித்துக் கொள்கிறேன்.

கனம் அங்கத்தினர்கள் திரு. அண்ணாமலை அவர்களும், திரு. செல்வராஜன் அவர்களும், 'ஏன் அதிகம் பண்ணக்கூடாது உடனடியாக?' என்று கேட்கலாம். அதுபற்றியும் கணக்குப் போட்டேன். அறுபத்தைந்து ரூபாயாக இருப்பதை 90 ரூபாயாக உயர்த்துங்கள் என்று சொல்லுகிறார்கள். அப்படிச் செய்தால், 195 லட்சம் ரூபாய் அதிகம் ஆகிறது. செகண்டரி கிரேடு ஆசிரியர் களுக்கு ரூபாய் 125 என்று வைத்தால், அதற்கு 39 லட்ச ரூபாய் ஆகிறது. சுமார் இரண்டேகால் முதல் இரண்டரை கோடி ரூபாய் அளவுக்கு அதிகம் ஆய்விடுகிறது. பண்டிட்களுக்காக ஏழு லட்ச ரூபாய் ஆகிறது. இன்னும் ஒன்றரை கோடி ரூபாய் இருந்தால்தான் திரு. அண்ணாமலை அவர்கள் சொன்ன அளவுக்குச் சம்பளம் உயர்த்த ஏற்பாடு செய்ய முடியும். இம்மாதிரி ஒரு அங்கத்தினர் சொன்ன யோசனையை ஏற்றுக்கொண்டாலும், மற்ற அங்கத்தினர் கள் சொன்னயோசனைகள் இருக்கின்றன. இருந்தாலும், இன்னும் நான்கு கோடி ரூபாய் வருஷமொன்றுக்கு இருந்தால் ஒரு அங்கத்தினர் சொன்ன யோசனையை ஏற்றுக்கொண்டு, அந்த அளவு உயர்த்திக்கொடுத்துவிட முடியும். இன்றைக்கு இந்த உயர்வு கொடுக்கவேண்டுமென்று சொல்லும்போது, மூன்றாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் நிறைவேற்ற வேண்டிய திட்டங்கள், மற்ற பணிகள் நம் முன்னால் காத்துக்கொண்டிருக் கின்றன. அதையும் நாம் மனதில் வைத்துக்கொண்டு இங்கு முடிவு எடுக்கவேண்டுமென்று முயற்சி செய்தால், இப்பொழுது கொடுத்திருப்பது ஓரளவுக்கு நியாயமானது, ஓரளவு திருப்தி ஏற்படுத்தக்கூடியதுதான். இதை வைத்துக்கொண்டு இன்னும் முயற்சி செய்வதன் மூலமாக நன்றாகப் பணியாற்றுவதன் மூல மாகத்தான் காரியங்களை நல்ல விதமாக, நிறைவேற்ற முடியும்; முன்னேற்றமான காரியங்களைச் செய்ய முடியும், முன்னேற்ற அடிப்படையில் நம்முடைய மக்களுடைய வாழ்க்கை நிலையை உயர்த்த முடியும் என்பதை எல்லோரும் அறிவார்கள்.

இந்த நிர்வாகம் நடப்பதைப்பற்றி, அதிலே ஒற்றுமை இல்லை, எப்படி இன்னும் காரியங்களைச் சரியாகச் செய்ய முடியும் என்பதைப்பற்றிப் பல பேர் பல கருத்துக்களைக்

குறிப்பிட்டார்கள். அந்தக் கருத்துக்களை நான் ஏற்றுக்கொள்கிறேன். அதைப் பரிசிலனை செய்து, நம்முடைய நிர்வாக இயந்திரம் இன்னும் நன்றாக நல்ல முறையில் நடைபெற என்ன என்ன மாறுதல் செய்யவேண்டுமோ என்ன என்ன ஊக்கத்தைக் கொடுக்க வேண்டுமோ அதையெல்லாம் செய்வதற்கு சர்க்கார் என்றைக்கும் முயற்சி செய்யும் என்பதை நான் தெரிவித்துக்கொள்கிறேன்.

அடுத்தபடியாக கனம் கல்யாணசுந்தரம் அவர்கள் லஞ்சத்தைப்பற்றி விரிவாகக் குறிப்பிட்டார். லஞ்சம் எங்கும் இருக்கிறது என்றும் எங்கு பார்த்தாலும் டவுட்டுகள் இருக்கிறார்கள் என்றும் அவர்களைப்பற்றியெல்லாம் விரிவாகச் சொன்னார். இவ்வளவு விவரம் தெரிந்தும் அவைகளைப்பற்றி அவர் இதுவரையில் சர்க்காருக்கு தெரியப்படுத்தாமல் இருந்ததை கவனித்தால் அவர் தன்னுடைய கடமையைச் செய்யத் தவறியவராவர் என்று தான் சொல்ல முடியும். உண்மையை தெரிந்திருந்தும் அவர் அந்த உண்மையை சர்க்காருக்குத் தெரியப்படுத்தாமல் இருந்தது சரியல்ல என்றுதான் நான் சொல்லுவேன். இவ்வளவு புள்ளி விவரங்கள் அவருக்குத் தெரிந்திருந்தால் அவைகளை சர்க்காருக்குத் தெரிவித்திருக்க வேண்டும். ஒன்று அவருக்கு எல்லாம் தெரிந்திருக்கும், அல்லது வேறு யாராவது அவருக்குத் தெரியப்படுத்தி இருக்க வேண்டும். அப்படி அவர் கேள்விப்பட்டிருந்தால் அதை வைத்துக்கொண்டு அவர் இம்மாதிரி சொல்வது என்பதும் சரியல்ல. ஏனென்றால் தனக்கு நிச்சயமாகத் தெரிகிறது என்று தோன்றினால்தான் அப்படித் தெரியப்படுத்தலாமேயொழிய நிச்சயமில்லாத விஷயத்தை வெறும் கேள்விப்பட்டதை யாரோ சொன்னார்கள் என்பதை வைத்துக்கொண்டு இங்கு சொல்வது என்பது அவ்வளவு சரியல்ல. இந்த முறையில் பார்த்தாலும் அவர் தன்னுடைய கடமையைச் செய்ய தவறி விட்டார் என்றுதான் சொல்ல வேண்டும். ஆகவே எந்த முறையை எடுத்துக்கொண்டாலும் அவர் தான் ஒரு எம்.எல்.ஏ. என்கிற கடமையை சரிவர நிறைவேற்ற தவறிவிட்டார் என்றுதான் சொல்ல வேண்டும். உண்மையான தகவல் தெரிந்திருந்தால் அதை உடனுக்குடனேயே சர்க்காருக்குத் தெரியப்படுத்தி இருக்க வேண்டும். ஆகவே இப்பொழுது அவர் தவறு செய்து விட்டாலும் இப்படிப்பட்ட தவறை இனிமேல் செய்ய மாட்டார் என்றே நினைக்கிறேன். ஆகவே இப்பொழுது சொன்னதை அடுத்தபடியாக அவர் பேசும் போது அதை வாபஸ் வாங்கிக்கொள்ளுவார் என்றே நினைக்கிறேன். 12-00 noon.

**SRI M. KALYANASUNDARAM**: நான் வாபஸ் வாங்க வேண்டிய அவசியமே கிடையாது. நான் சொன்னவைகள் எல்லாம் கனம் அமைச்சருக்கு தானாகவே தெரிந்திருக்கும். அவருக்குத் தெரியாத விஷயம் அல்ல. அவர் எல்லாவற்றையும் தெரிந்துகொண்டுதான் தெரியாததுபோல் சொல்லுகிறார். ஆகவே நான் வாபஸ் வாங்கிக்கொள்ள வேண்டிய அவசியம் இல்லை.

[23rd August 1960

THE HON. SRI C. SUBRAMANIAM: லஞ்சத்தைப்பற்றி சொல்லும்போது எவ்வளவோ பொறுப்புடன் அவர் சொல்லி இருக்க வேண்டும். நன்ருகத் தெரிந்தால்தான் அவர் இம்மாதிரி யெல்லாம் சொல்ல வேண்டும். அந்தப் பொறுப்பு அவருக்கு இருக்கிறது. இப்படிப்பட்ட புகார்களைச் சொன்னல் அதற்கு வேண்டிய புள்ளி விவரங்களை அவர் கொடுக்க வேண்டும். பொதுவாக அதிகாரிகள் ரேட் வைத்து வாங்குகிருர்கள் என்றும் அதை வாங்கிக்கொடுக்க டவுட்டுகள் இருக்கிருர்கள் என்றும் சொல்வது அவ்வளவு சரியல்ல. அப்படி இருந்தால் அதைப்பற்றி சர்க்காருக்குத் தெரிவித்தால் சர்க்கார் வேண்டிய நடவடிக்கை எடுத்துக் கொள்வார்கள். எந்த எந்த ரேட்டு வைத்து இருக்கிருர்கள் என்று அவர் சொல்லுகிருர். எந்த எந்த அதிகாரிக்கு எந்த எந்த ரேட்டு இருக்கிறது என்றெல்லாம் குறிப்பிட்டார். அந்தப் புள்ளி விவரங்களை அவர் சர்க்காருக்குக் கொடுத்திருக்கலாம். அப்படிக் கொடுக்க அவரும் கடமைப்பட்டிருக்கிருர். அப்படிக் கொடுக்கா விட்டால் அவர் தன்னுடைய கடமையைச் செய்ய தவறிய வராவார் என்றுதான் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் அவர் சொல்லுகிறவைகளுக்கு எல்லாம் ஆதாரம் இல்லை என்று தான் கொள்ள வேண்டும். அப்படியானல் அவர் ஆதாரமில்லாத வைகளைச் சொல்லுகிருர் என்ருல் அவர் தன்னுடைய கடமையைச் செய்ய தவறியவர் என்றுதான் சொல்ல வேண்டும். லஞ்சம் இருக்கிறது என்ருல் அவரே சொல்லுகிருர் அதை அடியோடு ஒழித்துக்கட்டி விடமுடியாது என்று. எந்த நிர்வாகமும் அதை ஒழித்துக்கட்ட வேண்டும் என்ற சூழ்நிலையில் இயங்கவே முடியாது. நிர்வாக யந்திரத்தில் குற்றங்கள் இல்லாமல் இருக் காது. அவைகளை மக்கள் எடுத்துச் சொன்னல் அவைகளை நீக்குவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம். எல்லா குற்றங் களையும் நிவர்த்திக்க முடியாவிட்டாலும் பெருமளவில் நீக்குவதற்கு நடவடிக்கை எடுத்துக்கொள்ளலாம். அதற்கு எல்லோரும் சேர்ந்து பாடுபட்டு முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். அதற்கு வேண்டிய முயற்சியில் எல்லோரும் சேர்ந்து ஈடுபட வேண்டும் என்ற கருத்தை நான் சொல்லிக்கொள்ள விரும்புகிறேன்.

அதற்கு அடுத்தபடியாக நிர்வாகத்தை நடத்திக்கொண்டு போகும்போது அதில் இருக்கக்கூடிய பல்வேறு விவகாரங்களை விசாரிக்க ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டும் என்றும் அதை ஆதரித்து வெட்டுப் பிரேரபணையும் கொடுத்திருக்கிருர். அதைப்பற்றி இங்கும் குறிப்பிட்டார். எல்லா காரியங்களுக்கும் கமிட்டி போட்டுக்கொண்டிருந்தால் அது முடியாத காரியம். அப்படி போட்டுக்கொண்டிருந்தால் எந்தக் காரியத்தையும் செய்ய முடியாது. இப்பொழுதுதான் சம்பளத்தை நிர்ணயம் செய்யும் காரணமாக ஒரு கமிட்டி அமைத்து அவர்களும் ஒரு ரிப்போர்ட்டை சமர்ப்பித்திருக்கிருர்கள். மறுபடியும் ஒரு கமிட்டி நியமிக்க வேண்டிய அவசியம் இல்லை என்று தோன்று கிறது. இன்றைக்கு இருக்கக்கூடிய சூழ்நிலையில் ஒவ்வொன்றுக் கும் ஒரு கமிட்டியை நியமிக்க வேண்டிய அவசியமே இல்லை.

23rd August 1960] [Sri C. Subramaniam]

இன்னும் இரண்டொரு வருஷங்களில் பொது தேர்தல் நடக்கப்போகிறது. புதிய சட்டசபை வரப்போகிறது. அப்பொழுது இதைப்பற்றி யோசித்துக்கொள்ளலாம். புது சட்டசபை என்ன முடிவுக்கு வருகிறதோ அதன்படி செய்து கொள்ளலாம். ஆகவே இப்பொழுது எந்த விதமான கமிட்டியையும் அமைக்க வேண்டிய அவசியம் இல்லை என்பதைச் சொல்லிக் கொள்ள விரும்புகிறேன். ஒரு கமிட்டி போட்டு முடிவுக்கு வந்த பிறகு இன்னொரு கமிட்டி போடவேண்டும் என்று சொன்னால் இப்படி ஒவ்வொரு காரியத்திற்கு கமிட்டி போட்டுக்கொண்டே தானிருக்க வேண்டும். அதற்கு முடிவே இருக்காது. அவையெல்லாம் ஆரம்பத்தில் பரிசீலனையில் இருக்குமே தவிர காரியங்களை நிறைவேற்ற சக்தி இல்லாமல் போய்விடும். ஆகவே ஏதாவது குறைகள் இருந்தால் அந்தக் குறைகளை தீர்த்துக் கொள்வதற்கு முயற்சிதான் எடுத்துக்கொள்ள வேண்டும். எல்லாவற்றையும் பரிசீலனை செய்து பார்க்க வேண்டும். எல்லாவற்றிற்கும் ஒரு குழு ஏற்படுத்த வேண்டுமென்றால் அது தொடர்ந்து போய்க்கொண்டேதான் இருக்கும். ஆகவே அவருடைய யோசனையை ஏற்றுக்கொள்ள முடியாத நிலையில் இருக்கிறேன்.

தனித்தனியாக சில பதவிகளை எடுத்துக்கொண்டு அந்த பதவிகளுக்கு இன்றைக்கு கொடுக்கக்கூடிய சம்பளத்தில் வேற்றுமைகள் இருக்கின்றன என்று எடுத்துக்காட்டப்பட்டது. இன்றைக்கு விவாதத்தில் இருக்கக்கூடிய அறிக்கையில் அதைப் பற்றியெல்லாம் விவாதிக்கப்பட்டிருக்கிறது. ஒவ்வொரு பதவிக்கும் கல்வித்தரம் எவ்வளவு இருக்க வேண்டும் என்றும், அனுபவம் எவ்வளவு இருக்க வேண்டும் என்றும் அந்த அடிப்படையில் ஒவ்வொரு பதவிக்கும் சம்பளம் நிர்ணயம் செய்யப் பட்டிருக்கிறது. அந்த முறையில் அந்தந்த உத்தியோகங்களுக்கு சம்பளம் எப்படி இருக்க வேண்டும் என்று விதிகள் செய்து அந்த அளவுக்கு சம்பள விகிதம் ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அந்த அடிப்படையில்தான் அவர்கள் முடிவு செய்திருக்கிறார்கள். கனம் அங்கத்தினர்கள் சொன்ன சில குறிப்பிட்ட பதவிகளை எடுத்துப் பரிசிலனை செய்து பார்த்தேன். அப்படிச் செய்து பார்த்ததில் பே கமிஷன் செய்த முடிவு சரியானதுதான் என்று முடிவு செய்து கொண்டேன். அந்தந்த பதவிக்கு தக்கபடியுள்ள கல்வித்தரம் அனுபவம் எல்லாவற்றையும் பரிசீலனை செய்துதான் அந்தந்த பதவிக்கு அவர்கள் சம்பளத்தை நிர்ணயம் செய்திருக்கிறார்கள் என்று தெரிய வந்தது. அவர்களுடைய முடிவை அவர்கள் காட்டியிருக்கக்கூடிய காரணங்களினால் அப்படியே ஏற்றுக்கொள்ளக்கூடியதாக இருக்கிறது என்பதை மட்டும் கனம் அங்கத்தினர்களுக்கு தெரிவித்துக்கொள்ள விரும்புகிறேன். சில இடங்களில் இரண்டொரு பதவிகளை குறிப்பாக எடுத்துக் குறிப்பிட்டு அவர்களுக்கு அதிகப்படியாக சம்பளம் கொடுத்திருக்க வேண்டும் என்றும் அப்படி அவர்களுக்குக் கொடுக்கவில்லை என்றும் சில இடங்களில் ஒரே மாதிரியான சம்பளம் கொடுப்பதற்கு பதிலாக குறைவான சம்பளம் கொடுக்கப்பட்டிருக்கிறது

என்றும் குறிப்பிட்டார்கள். அவைகளையெல்லாம் பரிசீலனை செய்ய வேண்டும் என்று நினைத்து ஒரு சில பதவிகளை மட்டும் குறிப்பாக எடுத்துக்கொண்டு அவைகளை பரிசீலனை செய்து பார்த்தேன். அதை பரிசீலனை செய்யும்போது கமிஷன் செய்த சிபாரிசு சரி என்று தெரிய வந்தது. அந்தந்த பதவியின் தரம் அதற்கு வேண்டிய கல்வி தரம், பயிற்சி, அனுபவம் முதலியவை களைப்பற்றி பரிசீலனை செய்தபோது அவைகள் எல்லாம் சரியாக கவனிக்கப்பட்டு அந்த அளவில் சம்பளம் நிர்ணயம் செய்யப் பட்டிருக்கிறது என்று தெரிய வந்தது. ஆகவே அவர்கள் எல்லா வற்றையும் நல்ல முறையில் பரிசீலனை செய்துதான் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார்கள். இருக்கக்கூடிய நிலைமையை நன்றாக ஆராய்ந்து ஒரு முடிவுக்கு வந்திருக்கிறார் என்பதைத் தான் நாம் உணர வேண்டும்.

அடுத்தபடியாக கனம் விநாயகம் அவர்கள் பேசும்போது ரேடியோ சூபர்வைசர்களுக்கும் பி.டப்ள்யூ.டி. சூபர்வைசர் களுக்கும் சம்பளத்தில் என் வித்தியாசம் இருக்கிறது என்று கேட்டார். அதைப்பற்றியும் பரிசீலனை செய்து பார்த்தேன். ரேடியோ சூபர்வைசருக்கு இரண்டு வருஷ பயிற்சி காலம். பி.டப்ள்யூ.டி சூபார்வைசருக்கு மூன்று வருஷ பயிற்சி காலம் என்று வைக்கப்பட்டிருக்கிறது. அதைத்தவிர பி.டப்ள்யூ.டி. சூபர்வைசர்களுக்கு வைக்கப்பட்டிருக்கக்கூடிய பரீட்சை மிகவும் கடினமான பரீட்சை. ஆகவே இவைகள் எல்லாவற்றையும் பரிசீலனை செய்து பார்க்கும்போது ரேடியோ சூபர்வைசருக்கும் பி.டபிள்யூ.டி சூபர்வைசருக்கும் வைக்கப்பட்டிருக்கிற சம்பளத் தில் வித்தியாசம் இருப்பது நியாயம் என்று முடிவு செய்திருக் கிறார்கள். அப்படியேதான் நாங்களும் முடிவுக்கு வந்தோம். ஒருவருக்கு 125 ரூபாய் இன்னொருவருக்கு 150 ரூபாய் என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது.

**Sri K. VINAYAKAM:** That is one category; there is another category of supervisors who are equally qualified as those in the Public Works Department. For them, at least, the same salary might have been given.

**The Hon. Sri C. SUBRAMANIAM:** ஆகவே கமிஷன் சிபாரிசுகளை அப்படியே ஒப்புக்கொண்டு உத்தரவு பிறப்பிக்கப் பட்டிருக்கிறது. இதைத்தவிர தனிப்பட ஏதாவது குறைகள் இருந்தால் அவ்வப்போது அதை கவனத்திற்குக் கொண்டு வந்தால் அதற்கான விண்ணப்பங்கள் செய்து கொண்டால் அதைப்பற்றி பரிசீலனை செய்து பார்த்து, அவர்கள் சொல்லக் கூடிய குறைகள் உண்மையானது என்று கண்டு பிடித்தால் அதைப்பார்த்து அதை நீக்குவதற்கு வேண்டிய முயற்சிகள் எடுத்துக்கொள்ளப்படும். அப்படியே எடுத்துக்கொண்டும் வரு கிறார்கள். ஆகவே அம்மாதிரி ஏதாவது இருந்தால் அதைப்பற்றி தகவல் தெரிவித்தால் அதைப்பற்றி பரிசீலனை செய்து பார்க்க முடியும். சாதாரணமாக நாங்கள் பரிசீலனை செய்து பார்த்ததில் எல்லாம் சரியாகத்தான் இருப்பதாக தோன்றுகிறது. கனம் விநாயகம் சொன்னதுபோல் ஏதாவது குறிப்பாக இருந்தால்

23rd August 1960] [Sri C. Subramaniam]

அதைப்பற்றி சொன்னால் அதைப்பற்றி பரிசிலனை செய்து பார்த்துச் சொல்லுகிறேன். ஆகவே ஒவ்வொருவரும் சொல்லியவற்றை எடுத்துச்சொல்லிக்கொண்டே போனால் அது முடியாத காரியம். ஆக, இந்த உப மானியக்கோரிக்கையை இந்தச் சபை முழுவதும் வெகுவாக ஏகமனதாக வரவேற்றிருக்கிறார்கள் என்றுதான் தோன்றுகிறது. இந்த நிலைமையில் இன்றைக்கு நம்முடைய சர்க்கார் ஊழியர்களுக்கு இன்றைக்கு ஏற்பட்டிருக்கக்கூடிய இந்த நிலைமையில் அவர்கள் திறமையாகவும் புது உற்சாகத்துடனும் பணியாற்ற வேண்டும். அப்படி பணியாற்றுவதற்கும் முயற்சி எடுத்துக்கொள்ள வேண்டும். அதற்கு வேண்டிய சூழ்நிலையையும் ஏற்படுத்திக்கொள்ள வேண்டும். அதே முறையில் எல்லா அரசியல் கட்சிகளும் அதற்கு உதவி இயங்க முன் வரவேண்டும் என்பது என்னுடைய கருத்து என்பதை வலியுறுத்திக்கொண்டு கடைசியாக இந்த உப மானியத்தை ஆதரித்து கமிஷனுடைய அறிக்கையை வரவேற்று பேசியவர்கள் எல்லோருக்கும் என்னுடைய நன்றியை தெரிவித்துக்கொள்ளுகிறேன். (ஸ்ரீ ஏ. கோவிந்தசாமி: எதிர்த்திருக்கிறார்களே.) அவர்கள் எதிர்த்தாலும் கடைசியில் ஆதரித்துதான் பேசியிருக்கிறார்கள். ஆதரித்துப் பேசும்போது குறைகளைத்தான் சொல்லி இருக்கிறார்கள். வரவேற்கும் முறையில் குறை சொல்வதை வரவேற்க வேண்டியதுதான். ஆகவே இந்த உப மானிய கோரிக்கையை எல்லோரும் ஏக மனதாக ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கேட்டுக்கொள்கிறேன்.

MR. SPEAKER : எதிர்க்கட்சிக்காரர்கள் எல்லோரும் சேர்ந்து முதல் மானிய கோரிக்கைக்கு கனம் அண்ணாமலையின் முதல் வெட்டுப் பிரேரபணையை ஆதரிக்கிறார்களா என்று கேட்டேன், அதை வற்புறுத்தப்போவதாக அறிவித்தார்கள். அதைப போலவே டிமாண்ட் 9-க்கு ஸ்ரீ கலியாணசுந்தரத்தின் 10-வது வெட்டுப் பிரேரபணையும் டிமாண்ட் 25-க்கு ஸ்ரீ என் கே பழநிசாமியின் 33-வது வெட்டுப் பிரேரபணையையும் வற்புறுத்தப் போவதாக கட்சித் தலைவர்கள் அறிவித்திருக்கிறார்கள். கனம் அமைச்சர் அவர்கள் மானிய கோரிக்கைகளை பிரேரேபிக்கும் போது அந்தந்த மானியங்களுக்குரிய வெட்டுப் பிரேரபணையை அங்கத்தினர்கள் பிரேரேபித்துப் பேசலாம் என்று தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

## VIII.—VOTING ON DEMANDS FOR GRANTS ON THE FIRST SUPPLEMENTARY STATEMENT OF EXPENDITURE FOR 1960–61.

### *Demand I—Land Revenue Department.*

THE HON. SRI C. SUBRAMANIAM : Mr. Speaker, Sir, on the recommendation of the Governor, I move—

"That the Government be granted a sum not exceeding Rs. 2,80,600 under Demand I—Land Revenue Department."

MR. SPEAKER : Motion moved—

"That the Government be granted a sum not exceeding Rs. 2,80,600 under Demand I—Land Revenue Department."